"திமிர் பிடித்த ஆடவர் சில ரது காம வெறிக் கிரையாகிய மகளிரே நாளடைவில் தாசிக ளாகப் பரிணமித்தனர். சுய நல மிக்க ஆடவர்கள் தங்கள் கூடா வொழுக்கத்துக்கு இன்னும் சௌகரியத்தை யேற்படுத்திக் கொள்ள கடவுள் பெயரையும், சமயத்தின்பெயரையும் ஆதரவாகக் கொண்டனர். ஆதலால், இக் கூட்டம் அதிகமாகி ஒரு தனி சமூகமாய் விட்டது. உலக உற்பத்திக்கே—மனித வளர்ச்சிக்கே—நிலைக்களமாக உள்ள தாய்மைத் தன்மை வாய்ந்த பெண்ணினத்தில் மிகக் கேவலமான தாசிகள்—வேசைகள் என்று ஒரு பிரிவு உண்டாயிருப்பதற்கு இதுதான் காரணம்."

என்கிறாள் கதாநாயகி ரமணி.



"தாசிகள் என்றால் ஜன சமூகத்தை அழிக்கும் விஷப் புழுக்கள் என்பது என் எண்ணம். கொலைகாரர்கள், கொள்ளையடிப்பவர்கள், கள்வர் முதலியோரைக் காட்டிலும் இத் தாசிகள் மிகக் கொடியவர்கள்; ஏனென்றால், கொலை, கொள்ளை முதலிய மாபெரும் பாதகங்களைச் செய்பவர்களால் ஏற்படும் தீமையைக் காட்டிலும் ஜன சமூகத்துக்கு இந்தத் தாசிகளால் உண்டாகும் தீமைகள் அதிகம்."

என்கிறான் கதாநாயகன் கலியாணசுந்தரம்.

இவ்விருவித அபிப்பிராயங்களில் எது சரி?

சிந்தனை சைத்ரீகர்

"ஜீவா"

தீட்டிய வாழ்க்கைச் சித்திரம்

# தாசி ரமணி

என்னும் நவீனத்தில்

இதற்குச் சரியான பதிலைக் காணலாம்.

பல சித்திரப் படங்கள் கொண்ட அழகிய பதிப்பு

விலை ரூபா 1—8—0 (தபாற் செலவு வேறு.)

---

ஆனந்தபோதினி ஆபீஸ்,

சௌகார்பேட்டை, சென்னை.




## உள்ளுறை.




"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.


| | | |
|---|---|---|
| தொகுதி 30 | தாரண ௵ புரட்டாசி ௴ ௧௨ <br> 1944௵ செப்டம்பர் ௴ 16௳ | பகுதி 3 |


## கடவுள் வணக்கம்.

கருத்தே புகுந்து கதிகாட்டும்
கண்ணே வருக! மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக! கருணைபொழி
காரே வருக! ஆனந்தப்
பெருக்கே வருக! யாங்கள்பெறும்
பேறே வருக! மறைசொல்கிளிப்
பிள்ளாய் வருக! பிறங்குதெய்வப்
பெருமாள் வருக! குறமடந்தை
தருக்கே வருக! மிடியகற்றும்
தருவே வருக! மன்பதைக்கோர்
தஞ்சே வருக! எமையளிக்கும்
தாயே வருக! பவப்பிணிக்கு
மருந்தே வருக! சமரபுரி
வாழ்வே வருக! வருகவே!
மறையின் சிரமெய்ப் பொருளான
வள்ளால் வருக வருகவே! (1)

இல்லாதான் வள்ளலர்ய் உள்ளானை
இரவாமுன் ஈதல் போலும்
நல்லானே உனது பதம் விரும்பாதேன்
ஆயிடினும் நல்க வேண்டும்
கல்லாத புல்லியர்போல் தேகபோ
கம்விரும்பிக் கலங்கா நின்ற
பொல்லாதேன் பிழை பொறுக்கும்
போரூர்வாழ் ஆறுமுகப் புனிதவேளே. (2)

# அஹிம்ஸை அரசு ஏற்படுமா?



பயங்கரமான கோர யுத்தம் நடைபெற்று வரும் இச்சமயத்தில், நவ நவமான வெடி குண்டுகளும், பீரங்கிகளும் பாய்ந்து மக்களைப் பல்லாயிரக் கணக்காக மாய்த்து வரும் இத் தருணத்தில், மகாத்மா காந்தி தமது உயிர்க் கொள்கையாகக் கொண்டிருக்கும் அஹிம்ஸா தர்மத்தை வற்புறுத்தி வருவதைக் கண்டு எவரும் ஆச்சரியப்படுவர். மற்றவர்கள் அடிகளுடைய அஹிம்ஸா தர்மக் கொள்கையைக் குறித்து அவநம்பிக்கையாகவும் ஏளனமாகவும் பேசப் பேச, அவருக்கு அக்கொள்கையில் அழுத்தமான நம்பிக்கை ஏற்பட்டு வருகிறது. இந்தியாவின் விமோசனம் மட்டுமன்று; உலகத்தின் விமோசனம் கூட அஹிம்ஸா தர்மத்தின் வாயிலாகவே ஏற்படும் என அவர் அழுத்தந் திருத்தமாகக் கூறுகிறார்.

சமீபத்தில் வார்தாவில் சேவா கிராமத்தில் நடைபெற்ற அகில இந்திய சர்க்கா சங்கம், கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகியவற்றின் நிர்வாக சபைக் கூட்டத்தில், மகாத்மா தாம் ஏறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகளாக வற்புறுத்திக் கூறிவரும் அஹிம்ஸா தர்மக் கொள்கையின் சிறப்பினையும் அதில் தாம் கொண்டுள்ள அபார நம்பிக்கையையும் நன்கு வெளிப்படுத்தி யிருக்கிறார். 'அஹிம்ஸா அரசாங்கம் ஏற்படவேண்டும்; அது சத்தியத்தின் பலத்திலே நிலைக்கவேண்டும்' என்று அவர் தம் சொற்பொழிவில் வற்புறுத்திக் கூறினார்.

இது சாத்தியமா? மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் அஹிம்ஸா அரசாங்கம் சாத்தியமில்லை என்று தான் தோன்றும். ஆனால், அவர் கூறுகிறபடி, அஹிம்ஸா தர்மத்தின் மீதும் சத்தியத்தின் மீதும் நம்பிக்கை வைத்து, அமைதியாகவும் சிரத்தையாகவும், உழைத்தால், கஷ்ட நஷ்டங்களைப் பொருட் படுத்தாது தியாகஞ் செய்ய முனைந்தால், அஹிம்ஸா அரசாங்கம் நிச்சயம் ஏற்படும் என்பதில் சந்தேக மில்லை.

மகாத்மா காந்தி மட்டு மன்று; உலக மக்கள் இன்று ஹிம்சையில் ஈடுபட்டு அனுபவித்துவரும் அலங்கோலத்தைப் பார்த்து, தத்துவ ஞானிகள், விஞ்ஞானிகள் முதலியவர்களுங்கூட, உலகில்

அஹிம்ஸா தர்மக் கொள்கை பரவ வேண்டும்; அஹிம்ஸா அரசாங்கம் ஏற்படவேண்டும் என்று கூறவும் வற்புறுத்தவும் ஆரம்பித்து விட்டார்கள். சமீபத்தில் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பிரசித்தி பெற்ற விஞ்ஞான சாஸ்திரி ஸர். ஸி. வி. ராமன் செய்துள்ள விஞ்ஞானப் பிரசங்கத்தைக் கூர்ந்து கவனிக்க வேண்டுகிறோம். "உலகிலுள்ள விஞ்ஞானிகள் அனைவரும் ஒன்று சேர்ந்து மனித உயிரின் மதிப்பை அறிந்து தங்களுடைய அறிவையும் முயற்சியையும் நாச வேலைக்கு உபயோகிக்கக் கூடாது என்று தெரிவிப்பது அவர்களது முக்கிய வேலைகளில் ஒன்றாகும். இது கனவாக இருக்கலாம். ஆனால், இது நனவாக மாறினால், உலகம் பெரு மகிழ்ச்சியடையும்." என்று அவர் முக்கியமாகக் குறிப்பிட்டிருப்பது இங்கு சிந்திக்கத்தக்கது. அவர் மேலுங் கூறுவதாவது:—"பறக்கும் வெடிகுண்டுகள், விஷவாயு முதலிய பல நாசப் பொருள்களை உண்டு பண்ண விஞ்ஞானம் உதவி யிருக்கிறது. மனிதர்கள் கஷ்டப்படவும் நஷ்டப்படவும் விஞ்ஞானம் உதவி யிருக்கிறது. இதுபோன்று அழிவையே அதிகரிக்கச் செய்ய விஞ்ஞானம் உபயோகிக்கப் படுமானால், இதற்கு விஞ்ஞானிகள் தான் பொறுப்பாளிகளாக இருக்க வேண்டும்...............கலை முக்கியம் தான். ஆனால், மனித ஒற்றுமையும் முக்கியம். மனித வாழ்க்கையைப் பற்றியும், அதன் மதிப்பைப் பற்றியும் புத்தர், இயேசு, மகா வீரர் முதலியோர் நமக்குக் காட்டி யிருக்கின்றனர். விஞ்ஞானத்தின் அடிப்படையான அம்சங்களைத் தவறுதலான வழியில் உபயோகிப்பதே தற்போதைய கஷ்டங்களுக்குக் காரணம். ஒரு கலையைத் தெரிந்து கொள்வது போலவே, விஞ்ஞானத்தை அறியவேண்டும். மனித வாழ்க்கையி லிருந்து அதைப் பிரிக்க முடியாது. அறிவை வளர்க்கவே விஞ்ஞானத்தை அறியவேண்டும். இதை அனைவரும் தெரிந்துகொண்டால், சீக்கிரத்திலேயே நாம் சிறந்த விஞ்ஞானிகளைக் காண முடியும். இன்று உலகில் உபயோகிக்கப்படுவது போலில்லாமல் அவர்கள் விஞ்ஞான அறிவை நல்ல காரியத்துக்கு உபயோகிப்பார்கள்" என்று விஞ்ஞான சாஸ்திரத்தை அஹிம்ஸா முறையில் பயன்படுத்த வேண்டுமென்று நன்கு விளக்கிக் கூறி யிருக்கிறார்.

ஸர். ஸி. வி. ராமனுடைய இப் பேச்சி லிருந்து, அவரும், அவர் போன்ற விஞ்ஞானிகளும் தற்காலத்தில் விஞ்ஞானக் கருவிகளைக் கொண்டு செய்யப்படும் ஹிம்ஸையான காரியங்களை மிகவும் வெறுக்கின்றனரென்றும் அஹிம்ஸா தர்மத்தையே அவர்கள் உள்ளங்களும் அவாவுகின்றன என்றும் நன்கு தெரிகிறதல்லவா! இதுபோன்று, மற்ற மக்களும் அஹிம்ஸா தர்மத்தின் அவசியத்தை உணரும் நாள் வருமானால் அஹிம்ஸா அரசாங்கம் கட்டாயம் ஏற்பட்டே தீரும் என்று நாம் நிச்சயமாக நம்புகிறோம்.

---

# ஆத்ம ஸமர்ப்பணம்

"மைவண்ணன்"

**ம**க்கள் எல்லாம் வல்ல இறைவனை வழிபட்டு உய்யும் முறை மெய்ஞ்ஞானச் செல்வர்களால் பலவிதமாகச் சொல்லப்பட்டு வருகிறது. இவ்விதம் இறைவன் திருவடிப் பேற்றை அடையும் நெறி பலவாருகக் கூறப்பட்டு வந்தாலும், அதை நான்கு விதமாக வகுத்தனர் பேரின்ப நிலை தெளிந்த பெரியார்கள்:

> **"சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திரமார்க்கம்**
> **தாதமார்க்கம் என்று சங்கரனை யடைய**
> **நன்மார்க்க நாலிவைதான் ஞானயோக**
> **நற்கிரியா சரியையென்று நவிற்றுவதும் செய்வர்"**

என்று அருணந்தி சிவாசாரியார் என்னும் பெரியார் விவரித்திருக்கிறபடி, **சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாதமார்க்கம்** என்று நான்கு வழிகள் இறைவனை அடைவதற்குக் காட்டப்பட்டிருக்கின்றன. இந் நான்கு நெறிகளே, **ஞானம், யோகம், கிரியை, சரியை** என்று வேதாகமங்களில் கூறப்பட்டிருக்கின்றன. இந் நான்கு நெறிகளும் ஆண்டவனை அடைவதற் குரிய ஒரே வழிதாமாயினும், மக்கள் மனப் பக்குவத்துக்கும் தரத்துக்கும் தக்கவாறு மகான்கள் வகுத்திருக்கின்றனர்.

இனி, இந் நான்கு நெறிகளையும் முறையே ஆராய்வோம்; கீழ்ப்படியில் முதலில் இருப்பது **தாசமார்க்கம்.** தாசமார்க்கம் என்றால் என்ன? ஒரு தலைவனுக்கும் அதாவது இய்மானனுக்கும் அவனுக்குப் பணி செய்யும் அடியானுக்கும் அதாவது வேலைக்காரனுக்கும் இடையே நிகழும் அன்பின் தொடர்பைக் காட்டுவதே தாசமார்க்க மாகும். இத் தொடர்பில், இயமானன் உயர்ந்த நிலையிலும் பணியாள் தாழ்ந்த நிலையிலும் இருத்தலால், வேலைக்காரன் இயமானனுடன் நெருங்கிப் பழக முடியாது. இயமானன் ஏவலை எதிர் பார்த்து அவன் சிறிது தொலைவி லிருந்தே எதையும் செய்ய வேண்டும்.

இரண்டாவது படியில் உள்ளது **சற்புத்திரமார்க்க** மாகும். இது ஒரு தந்தைக்கும் மகனுக்கும் இடையே நிகழும் அன்பைத் தெரிவிப்பதாகும். இயமானன்பால் பணியாளுக்கு இருக்கிற உரிமை, அன்பைவிட, தந்தைக்கும் மகனுக்கும் சிறிது அதிகமாக உண்டு என்பதை யாவரும் அறிவர். இவ்விதம் குமாரன் தகப்பனுடன் நெருங்கிப் பழகி உரிமையும் அன்பும் கொண்டாடலா மாயினும், இருவரும் சரி சமத்துவமாக அளவளாவ முடியாது.

மூன்ருவது படியில் வருவது **சகமார்க்கம்** என்பதாகும். மனமொத்த இரு நண்பர்களின் இடையே நிகழும் அன்பொழுக்கத்தைக் குறிப்பிடுவதாகும் இது.

இயமான னொருவனுடன் ஒரு வேலையாள் அன்புகொண்டு ஒழுகினுலும், அச்சத்தோடு தான் பழகி வருவான். அதுபோல்,

தன் தகப்பனுடன் குமாரனொருவன் மிகுந்த அன்பு பூண்டு ஒழுகி வந்தாலும் தந்தை செய்யும் எல்லாச் செயல்களிலும் தாராளமாகக் கலந்து கொள்ள முடியாது. தன்னைப் பெற்ற தந்தையாயிற்றே என்று இவன் அச்சம், மரியாதையோடுதான் அளவாகப் பழகுவான். தோழர்கள் நிலையோ அவ்விதமில்லை. அவர்களிடையே அச்சம், மரியாதை உயர்வு தாழ்வுகளைக் காண முடியாது. எக்காரியத்தையும் ஒளிவு மறைவின்றி இருவரும் செய்வர். நன்மை, தீமை, சுக துக்கங்களில் ஒருவருக்கொருவர் உதவியாயிருப்பர்.

ஆனாலும், இந்நிலையை விட உயர்ந்ததொன்று இருக்கிறது. அதுதான், நான்காவது படியாய் நிற்கும் **சன்மார்க்கம்** என்பது. இது முன்னே கூறப்பட்டு வந்த மூன்று நெறிகளினும் சிறந்ததொன்றாகும். உரு, திரு, கல்வி, வயது முதலியவைகளால் ஒத்த ஆடவனொருவனும் பெண்மணியொருத்தியும் காதல் அன்பால் கலந்து உறவாடும் உயர்நிலைதான் சன்மார்க்கம் என்று சிறப்பித்துக் கூறப்படுகிறது. இயமானன்-அடியான், தந்தை-மகன் தொடர்புகளைவிட, அவர்களின் அன்பு நிலையைக் காட்டிலும், தோழர்களின் தொடர்பும் அன்பும் சிறந்ததாயினும், அவர்களும் ஓரெல்லையில் தான்-அதாவது உள்ளத்தோடு உள்ளம் ஒன்றிய ஓரெல்லையில்தான் நிற்கின்றனர். ஆனால், காதலர் நிலையோ அப்படிப்பட்டதன்று. காதல் அன்பின் வயப்பட்ட ஆண் பெண் சேர்க்கை, உள்ளக் கலப்புடன் மட்டும் நின்று விடாமல், உடல் கலப்பும் உடையராகின்றனர். உள்ளத்தையேயன்றி, உடம்பையும் ஒருங்கு பிணித்து நிற்கும் இக்காதலன்பு அன்பின் சேர்க்கைகள் எல்லாவற்றிற்கும் மேற்பட்ட ஒப்பற்ற உயர் நிலையாகும். இக் காதல் அன்பின் சேர்க்கையால் உண்டாகும் இன்பப் பெருக்கின் நிலை அதை அநுபவிக்கும் காதலர்களுக்கு-அதாவது ஆண் பெண்ணுக்கு-அன்றி மற்றவர்க்குப் புலனாகாது. இக் காதலன்பில்தான் ஒருவரிடத்து ஒருவர் தங்களை ஒப்படைக்கும் நிலை, யாதொன்றையுங் கருதாது, தன் உடல், பொருள், ஆவி மூன்றையும் சமர்ப்பிக்கும் நிலை ஏற்படுகிறது. இத்தகையதோர் உயர் நிலையைத் தான்—ஆண்டவனுடன் ஆன்மா ஐக்கியப்படும் பேரின்ப நிலைக்கு உதாரணமாகக் கொண்டனர் ஆன்றோர்கள். இன்னதென்று வார்த்தைகளை விவரிக்க முடியாத பேரின்ப அனுபவத்தைப்பற்றிக் குறிப்பிட வேண்டுமானால், மக்கள் தங்கள் அனுபவத்தில் அறியும் காதல் இன்ப அனுபவத்தைக் கொண்டுதான் தெளிவிக்க முடியும். உலகத்தில் காணாததற்கு உவமையாகக் கண்டதையே உவமித்தாலன்றி, வேறொன்றால் அறிவித்தால், அது புலப்படாதன்றோ! எனவே தான், ஆண்டவனிடம் தங்களை முற்றும் ஒப்புவித்து அடைக்கலம் புகுந்த ஞானிகள், ஆத்ம ஸமர்ப்பணம் செய்த மகான்கள், நாயக—நாயகி பாவத்தில்-அதாவது, ஆண்டவனை நாயகனாகவும், தங்களை நாயகியாகவும் வைத்து—வழி பட்டு அருநெறியடைந்தனர். இவ்வித உயர் நிலையையே விசிஷ்டாத்வைத மதமான வைஷ்ணவமும், **சரணாகத மார்க்கம்** என்று அழைத்து வருகிறது. ஏன்?

உலகிலுள்ள எல்லா மதங்களும், சன்மார்க்கத்தை—உயிர்கள் ஆண்டவனுடன் இரண்டறக் கலத்தலை - ஒவ்வொரு பெயரால் வழங்கி வருகின்றன.

முதலில் விவரித்துள்ளவாறு ஆண்டவனை இய்மானாகவும், தந்தையாகவும், தோழனாகவும் வைத்து மக்கள் வழிபட்டு முக்திப் பேற்றை அடையலாமாயினும், அவனைத் தங்கள் ஆருயிர்க்காதலனாகக் கொண்டு அவன்பால் தங்கள் முற்றும் ஒப்புவிக்கும் நிலைதான் மிகச் சிறந்ததாகும்.

ஆகவே, மக்கள் உலகத் துன்பங்களிலிருந்து விடுதலை பெறவேண்டுமானால், பவப்பிணியைப் போக்கிக்கொள்ள வேண்டுமானால், சர்வ சங்க பரித்தியாகஞ் செய்து ஆண்டவனை அடைக்கலம் புகவேண்டும். தன்னை அவன் வசம் ஒப்படைத்து விடவேண்டும். அதாவது ஆத்மாவை அவனது திருவடிகளில் ஸமர்ப்பித்து விடவேண்டுமென அருளிப் போந்தனர் மெய்ஞ்ஞானிகள்.

சமூக சுதந்திரத்தை—தேச சுதந்திரத்தைப் பெற வேண்டுமானால், மக்கள் எப்படி தங்கள் உடல், பொருள்களைத் தியாகஞ் செய்யவேண்டியிருக்கிறதோ, அதுபோல, ஆத்ம சுதந்திரம் பெற வேண்டுமானாலும் மக்கள் தங்கள் உடல், பொருள், ஆவி மூன்றையும் தியாகஞ்செய்து விடவேண்டும். அதாவது, ஆண்டவனுக்கு அவைகளை அர்ப்பணஞ் செய்துவிட வேண்டும். உலகியலில் மங்கையொருத்தி தான் விரும்பிய-பெயர் கேட்டு ஊர் கேட்டு உருவத்தைக் கேட்டு மயங்கிய—காதலனொருவனிடம் காதலின்பத்தைப் பெறுவதற்கு தன்னைப் பெற்றவர்கள், உற்றார்கள், சமூகத்தார்கள் யாவரையும் விட்டு, உலகாசாரத்தை உதறித் தள்ளித் தன்னலத்தை மறந்து தானென்பது ஒரு பொருளாயிருப்பதையே மறந்து அவன் வசமாகிவிட வேண்டி யிருக்கும்போது, இறைவனது பேரின்ப நிலையை அடைய வேண்டுமானால், எவ்வித நிலையை யடைய வேண்டுமென்று கூறவும் வேண்டுமோ! ஆண்டவனின் ஆயிரம் திருநாமங்களை அனவரதம் உச்சரிக்க வேண்டும். இந் நிறத்தன், இவ்வண்ணத்தன், இப்படியன் என்று எழுதிக் காட்டொணாத இறைவனைத் தன் மனத்தில் ஒருவிதமாக ஆவாகனஞ் செய்யவேண்டும. அவன் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளை வலம் வரவேண்டும். தந்தை, தாய், மனைவி, மக்கள், தமர் என்ற குடும்ப பந்தத்தை அறுத்தெறிய வேண்டும். மூடச்சமூகக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிய வேண்டும். நான், எனது என்ற அகங்கார மமகாரங்களைச் சுட்டெரிக்க வேண்டும். தான் என்று ஒரு பொருள் இருப்பதாகவே எண்ணாமல், தன் உடல், உயிர், பொருள்களை யெல்லாம் ஆண்டவன் வசமே ஒப்படைக்க வேண்டும். இதுவே, 'ஆத்ம ஸமர்ப்பணம்' எனப்படும்.

**என்பேஉருக நின்அருள் அளித்துஉன் இணைமலர் அடிகாட்டி**
**முன்பேஎன்னை ஆண்டுகொண்ட முனிவா! முனிவர் முழுமுதலே!**
**இன்பேஅருளி எனைஉருக்கி உயிர்உண்கின்ற எம்மானே!**
**நண்பே அருளாய்என் உயிர்நாதா! நின்அருள் நாணுமே.**

# பாரதியின் பாக்கள்

பி. சி. தம்பி



தெள்ளமுதத் தமிழரசி உலகோர் கண்முன்
திகழ்ந்த மணிமகுட மதைப்பெற்ற ளென்ன
வெள்ளைமலர்க் கமலமுறை செல்வியோடு
விளங்குதிருச் செல்வி விளையாடித் துள்ளும்
எள்ளரிய சிறப்புபல ஏய்ந்து நின்ற
இந்தியத்தாய் விலங்கினையும் நீத்தா ளென்ன
உள்ளமது களித்தாடச் செய்த பாக்கள்
உயர்கவிஞன் பாரதியின் பாக்க ளன்றோ? (1)

ஓங்காரங் கொண்டு உயர்மலைகள் சுற்றி
ஓடிவரும் மாநதியின் ஓட்ட மென்ன,
ஆங்காரங் கொண்ட புயல்மாரு தத்தின்
ஆவேசங் கொண்ட பெருவேக மென்னத்,
தீங்கான காரிருளை நீக்கும் அந்தத்
தினகரனின் ஒளிவெள்ளம் பாய்ச்ச லென்னப்
பாங்கான இலக்கியமாம்; உலகு தன்னில்
புதுமைபல செய்தபெரும் பாக்கள் ஐயா! (2)

நாட்டினிலே சுதந்திரத்தின் வாஞ்சை ஊட்டி
நம்மவர்க்கு விடுதலையில் மோகங் காட்டி
வீட்டினிலே பெண்களுக்கு விளக்க மூட்டி
விடுதலையின் முரசுதனை நாளும் கொட்டி
ஊட்டிவளர் தாய்மொழியை உலகில் காட்டி
உள்ளமது உருகஇசை தானும் கூட்டி
பாட்டினிற்கே பாரதியின் பெயரும் நாட்டும்
பாரதியின் தேமதுரப் பாக்க ளன்றோ? (3)

காலையிளம் பரிதியெனக் கவினைக் காட்டிக்
கற்பனையின் சிகரமிசை ஏறி நின்று,
சோலைவளர் குயிலினிசை கூறி நின்று,
சொற்சுவை யென்பீடமிசை வீற்றி ருந்து
கோலமிகு கவிதைபெறு உணர்ச்சி யென்னும்
கோபுரமே ஏறிவிளை யாடி இன்று
வேலையென ஆழ்பொருளைக் காட்டி நின்று
வெற்றி தினங்கொட்டு பெருபாக்க ளன்றோ? (4)

"காதல் என்பது சுதந்தரமான ஒரு உணர்ச்சி; அதற்கு எவ்விதமான வரம்பும் கட்டு திட்டமும் கிடையாது" என்ற விஷயத்தை அடிப்படையாக வைத்து ஆங்கில எழுத்தாளர் ஸ்ரீ ஆல்பிரெட், எச் மைல்ஸ் எழுதிய அழகான சிறுகதை இது:

# காதலும் பிராயமும்

கு. அழகிரிசாமி மொழி பெயர்த்தது.



ஜான் ஸ்டார்கஸுக்கு ஐம்பத்தோரு வயதாகிறது. நாற்பத்து ஒன்பது வருஷ பாரத்தையும் பொறுப்பையும் கொஞ்சங்கூடத் திணறுமல் சுமந்துவிட்டு, வயோதிகத்தின் தள்ளாமையைப் பொருட்படுத்தாதவாறு தம் உள்ளத்தைப் பக்குவப்படுத்திக் கொண்ட நிலையில் அவர் தம் ஐம்பதாவது வயதில் பிரவேசித்தார். இப்போது ஐம்பத்தொன்று பிறந்து விட்டது.

இதெல்லாம் அவர் தம் முகத்தைக் கண்ணாடியில் பார்க்கும் போது எண்ணமிடுவது. அவருடைய தலைமயிர் நரைத்து, அங்கொன்று இங்கொன்ருக முரடாக முளைத்திருக்கும். இந்த நரையை மறைத்து மூடவேண்டும் என்று அவர் தொப்பியொன்றும் அணிய முற்படவில்லை. காலத்தின் அடையாளத்தை மறைக்கும் தோரணையில் அவர் தம் நரைமயிர் எல்லாவற்றையும் களைந்தபோதிலும் அவை தம் உடலைத் துருத்திக்கொண்டு முளைத்துவிடும். "அரை நூற்றாண்டு காலம் நாங்கள் எங்கள் உருவத்தைக் காணச் சரியான சந்தர்ப்பத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தோம். இப்பொழுது எனக்கு அந்தச் சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது. எங்களை யாரும் மறைத்து வைக்க முடியாது" என்று சொல்வதுபோல் முளைத்திருந்தன அந்த நரை உரோமங்கள். ஜானுடைய சிநேகிதைகளும் அவரை மேற்கண்டவாறு சொல்லிப் பரிகசிப்பார்கள். அவருடைய மனதைக் கவரவேண்டும் என்று இதுவரை எந்தப் பெண்ணும் நினைத்ததுகூடக் கிடையாது. அந்த இளம் பெண்கள் யௌவனம் நிறைந்த தம் காதலர்களின் முன்னிலையில் எவ்வளவோ அடக்கமாக இருப்பார்கள். அந்த மதுரபாவமான அடக்கத்தால் எவ்வளவோ இன்பத்தைத் தம் காதலருக்கு அள்ளிக் கொடுப்பார்கள். ஆனுல் ஜான் முன்னிலையில் யாரும் எதையும் அலட்சியமாய்ப் பேசுவார்கள். தங்கள் கன்னிமையின் அந்தரங்கக் காதலை வெளிக்காட்டாதவாறு ஊடல் கொண்டு என்னென்ன சைகைகள் எல்லாம் காட்டுவார்கள்! அதெல்லாம் ஜானிடம் காட்ட ஏன் விரும்பப் போகிருர்கள்?

ஜானுடைய வாலிப வாழ்க்கையின் லீலைகளும் இன்பதுன்பங்களும் மறைய ஆரம்பித்தன. வாழ்க்கையே அவருக்கு ஒரே வெள்ளைப்போக்காக இருந்தது—ஆம்; அவருடைய நரை ரோமம் போல்தான்—வயது ஐம்பத்தொன்று அல்லவா?

இரண்டொரு நாட்களுக்கு முன்பு மார்ட்டன் லாட்ஜில் ஒரு டென்னிஸ் பந்தாட்டம் நடந்தது. அங்கே பந்து வலை முதலியவற்றைப் போட்டுவைக்கும் அறை ஒன்று இருக்கிறது. ஜான், எதற்கோ அந்த அறைக்குள் திடீரென்று நுழைந்துவிட்டார். அங்கே, அப்போதுதான் குதித்து விளையாடிவிட்டு வந்த ஒரு அழகான பந்தாட்டக்காரி தன் கூந்தலைக்கோதி ஒதுக்கிக் கொண்டிருந்தாள். முன்பின் எதிர்பாராதவாறு தன் அறைக்குள் யாரோ ஒருவர் நுழைவதைப் பார்த்து அவள் முதலில் திடுக்கிட்டாள். ஆனால் அந்த ஆசாமி ஜான் என்று தெரிந்துகொண்டதும், "ஓ, நீங்களா? பரவாயில்லை" என்று அலட்சியமாகச் சொன்னாள். அப்பொழுதுதான் ஜான் தமக்கு ஐம்பத்தோரு வயதானதைத் தெளிவாக உணர்ந்து கொண்டார்.

ஜானும்கூட ஒரு காலத்தில் ஒருத்தியைக் காதலித்தார். அதெல்லாம் பழங்கதை. அவருடைய வாலிபப் பிராயத்திலே, ஒரு நாள் ஒரு பெண்ணைச் சந்தித்தார். அவளுடைய இனிய குணபாவங்களை வியந்து வியந்து போற்றினார். மிக்வும் தப்பிதமான முறையில் ஆசையை வைத்து அவளைப் பின் தொடர்ந்து அலைந்தார். அவர் அவளை அடைவதற்குப் பிரயோகித்த தந்திரங்களையெல்லாம், ஒரு நகரத்தை வெற்றிகொள்ள உபயோகித்திருந்தால் நிச்சயமாய் வெற்றி கிடைத்திருக்கும். ஆனால், பாவம், ஒரு மெல்லிய இனிமை பொருந்திய பெண் இருதயத்தை முற்றுகை போட முயற்சித்தார். பருவகாலங்களைப் பற்றிப் புகழ்ந்து பேசிக் கொண்டிருந்தால் ஜான் திடீரென்று அந்தப் பெண்ணைப் பற்றிப் புகழத் தொடங்கிவிடுவார். கடைசியில் தம் லட்சியத்தைச் சீக்கிரம் அடையவேண்டும் என்ற பரபரப்பில் காரியம் கைகூடாமல் போய் மனமுடைந்து போனார்.

அவளோ கல்யாணம் செய்துகொண்டாள். யாரை, எந்த இடத்தில் என்ற விபரம் ஒன்றும் ஜானுக்குத் தெரியாது. இது இருபத்தைந்து வருஷத்துக்கு முந்திய சமாச்சாரம்.

சமீபத்தில், ஒருநாள் அவர் ஓர் இடத்தில் நின்று கொண்டிருக்கையில் அந்தப் பெண் ஒரு மாடியில் ஏணிப் படிகளின் வழியே மேலேறிப் போவதைச் சந்தர்ப்பவசமாகப் பார்த்துவிட்டார். உடனே அந்த ஏணியின் உருவத்தைத் தம் ஞாபகத்தில் பதித்துக்கொண்டார். அது முதல், அவர் தனியாக இருக்கும் பல இரவுகளில் அந்த நினைவு—ஏணி வழியாக அதே வெண்ணிறமான பாதங்கள் ஏறிச் செல்வதுபோல் தோன்றும். அப்புறம் அந்த ஏணியில் கடைசிப் படியை மிதித்துத் திரும்பும்போது அதே

உதடுகளும், கண்களும் அவருடைய காதலைப் புறக்கணித்து விட்டுச் சென்றுவிடும்.

ஜான் ஒரு நல்ல ஆள். அவருக்குப் பண ஆசை ஒன்றும் கிடையாது. எந்த அருமையான பொருளையும் இல்லையென்று சொல்லாமல் தானம் செய்துவிடுவார். அவருடைய தேவைகள் மிகவும் குறைவு. அதுவும் அத்தியாவசியமான தேவைகளாகத் தான் இருக்கும். லண்டன் வட்டாரத்திலே, ஒரு இடத்தில் அவருக்குத் தம் சகோதரியுடன் பாகம் செய்துகொண்ட ஒரு நவநாகரிகமான மாளிகையும், நகரத்திற்குள்ளே இரண்டு சின்ன ஆபீஸ் கட்டிடங்களும் இருந்தன. அந்த ஆபீஸில் ஒரு குமாஸ்தா வேலை செய்துவந்தார்.

இப்போது ஜானுக்கு ஒரு திகைப்பு உண்டாகிவிட்டது. அதாவது அவரிடம் வேலை பார்த்துவந்த அந்த குமாஸ்தர், தனக்கு வரும்படி அதிகமாக உயரக்கூடிய வேறொரு உத்தியோகத்தை நாடி தன் வேலையை ராஜிநாமா செய்துவிட்டுப் போய்விட்டார். ஆனால் டைப் அடிக்கத் தெரிந்த ஒரு குமாஸ்தாவை நியமிக்க வேண்டி இருந்தது. அதைப் பத்திரிகையில் விளம்பரப் படுத்தினர்.

பழைய காலத்து மனுஷரானதால் பெண் பிள்ளைகளும் 'டைப்' பழகியிருப்பார்கள் என்ற விஷயம் அவருககுத் தெரியாது. அதனால் குமாஸ்தா வேலைக்கு விண்ணப்பித்துக் கொண்டவர்களில் அநேகர் பெண்களாக இருந்தது அவருக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒரு பெண் குமாஸ்தாவை வேலைக்கு வைத்துக் கொள்ள அவர் நினைத்ததுகூடக் கிடையாது. அதனால் அவர்களுடைய மனுக்களை யெல்லாம் ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு, மற்றவைகளையும் கவனமாகப் பரிசோதித்து தம் கையாலேயே கீழ்க்கண்டவாறு பதில் எழுதி தபாலில் போட்டார்.

"மிஸ்டர் கிளாட் எட்ஜ்காமை 10-ம் தேதி வியாழக்கிழமை காலை 11–மணிக்கு 22, காப்ட்ஹால் மாளிகையில் நேரில் காண ஜான் விரும்புகிறார்."

ஜன நெருக்கமான ஓரிடத்தில் உள்ள ஒரு சிறு விட்டுக்கு மேற்கண்ட கடிதம் வந்து சேர்ந்தது. அங்கே கிளாட் எட்ஜ்காம் என்ற ஆடவர் எவரும் இல்லை. அந்தப் பேருடையவர் இறந்து போய் பல வருஷங்களாகிவிட்டன. அவருடைய மனைவியும் ஒரு சில மாதங்களுக்கு முன்புதான் இறந்துபோனாள். ஆகவே, கிளாட் எட்ஜ்காம் என்ற கல்யாணமாகாத ஒரு பெண்ணின் கையில்தான் அந்தக் கடிதம் கிடைத்தது. அதை விரித்துப் பார்த்தபோது ஏதோ ஒரு மோசமான செய்தியைப் பார்த்த மாதிரி அவள் கைகள் படபடவென்று ஆடின. பிறகு அந்தக் கடிதத்தை அவள் தன் மடியில் வைத்துக்கொண்டு அந்தக்

கடிதம் சிருஷ்டித்து விட்ட பிரச்னையைப்பற்றிச் சிந்தனை செய்து கொண்டிருந்தாள்.

எட்ஜ்காமுக்கு பத்தொன்பது வயது. பத்தொன்பது வயது நிரம்பிய ஒரு ஆங்கிலப் பெண்ணுக்கு இருக்கவேண்டிய அம்சங்களெல்லாம் அவளிடம் இருந்தன. அவள் தன் பிள்ளைப் பிராயத்திலேயே தந்தையை இழந்தவள். தாயும் ஒரு சில மாதங்களுக்கு முன்தான் இறந்துபோனாள். அவள் இறந்ததும் அவளுக்கு வந்துகொண்டிருந்த வருவாயும் நின்றுவிட்டது. உலகத்தின் நடுவே தன்னந்தனியான தன் நிலையை உணர்ந்து ஜீவனத்துக்கு ஏதாவது வழிதேடவேண்டும் என்று 'டைப்'பையும், சுருக்கெழுத்தையும் கற்றுக்கொண்டாள் எட்ஜகாம். பத்திரிகைகளில் வெளியாகும் அநேக தேவை விளம்பரங்களைப் பார்த்து விண்ணப்பித்தும் அவளுக்குக் கிடைத்தது இப்போது வந்த இந்தப் பதில் கடிதம்தான். அதுவும் விண்ணப்பதார் ஆண் என்று கருதி எழுதப்பட்ட பதில். அவள் மறுபடியும் ஒரு முறை அந்த விளம்பரத்தையும் ஜானுடைய பதிலையும் வாசித்துப் பார்த்தாள். உடனே விண்ணப்பதாரை ஆண் என்று ஜான் எடுத்துக் கொண்டது பிசகு என்று எழுத நினைத்தாள். கடைசியில் தனக்கு உள்ள கடன்களையும் தான் அவசரமாக வேலை தேட வேண்டிய அவசியத்தையும் நினைத்துப் பார்த்தபோது, நேராகவே அவரிடம் சென்று, ஏன் அவர் தம் காரியாலயத்தில் ஒரு பெண் குமாஸ்தாவை வேலைக்கு எடுத்துக்கொள்ளக்கூடாது என்று வாதாடியாவது கேட்கவேண்டும் எனத் தீர்மானித்தாள்.

புதன்கிழமை மாலை. மறுநாள் காலை 11-மணிக்குத் தான் கார்பட்ஹால் தோட்ட மாளிகைக்குப் போகவேண்டியது. ஆனால் முதல் நாள் மாலையிலேயே அது எவ்விடத்தில் இருக்கிறது என்று பார்த்துவரப் புறப்பட்டாள். அன்று மாலையில் சூரியன் ஒளி வீசிக்கொண்டிருந்தான். ஜூன்மாதப் பகலின் உஷ்ணம் ஓய்ந்ததும், ஆகாயம் மனோகரமாகக் குளிர்ச்சி பொருந்தி இருந்தது. அந்த அழகான இளம் பெண் தன் நடையலங்காரத்தோடு ஐந்து மணிக்கு கார்ப்ட்ஹால் தோட்ட மாளிகைக்கு எதிர்ப்புறமாக அமைதியோடு நடந்துகொண்டே பிறருக்குத் தெரியாதவாறு 22-ம் நம்பர் ஆபிஸைத் தேடிப் பார்த்துக்கொண்டு சென்றாள். நீடித்த நாட்களாக மனித நடமாட்டம் அற்றுப்போன இடம் அது. அந்த முற்றத்தில் தன்னால்தான் அந்த இடத்திற்குத் தோட்டம் என்ற பெயரைத்தேடிக்கொடுத்த, பரந்து கிளைத்திருக்கும் ஒரு பழைய மரத்தில் ஊர்க்குருவிகள் சப்தமிட்டுக் கொண்டிருந்தன. அடர்த்தியான புதர்களிடையே உணவு தேடும் ஒரு மெலிந்த கருநிறப்பூனை ஆரஞ்சுப் பழத் தோல்களை முகர்ந்து பார்த்துக் கொண்டு இருந்தது. அந்தப் பழத்தோல்தான் அந்த இடத்தில் வர்ண சௌந்தரியம் அளித்துக்கொண்டு இருந்தது. இங்கும் அங்கும் தாமதித்து விட்ட ஆபீஸ் பையன்கள் கடைசித் தபாலில் சேர்ப்பதற்காகக் கையில் கடிதங்களோடு ஓடிக்கொண்

டிருந்தார்கள். சிலர் வாசல் கதவுகளைப் பாதி மூடிவிட்டுத் தரையைப் பெருக்கிப் பாய்விரித்துக் கொண்டிருந்தார்கள்.

ஜான் அன்று 'லண்டன்—பாலம்' ஸ்டேஷனுக்குப் போய் ரயில் கிடைக்காமல் திரும்பிவந்தார். ஒரு தனி ஆளே ஆபீஸ் வேலைகளையெல்லாம் முடித்துவிட்டுக் குறித்த காலத்தில் ரயிலைப் பிடிப்பது என்பது சாமான்யமான காரியமில்லை. அவர் திரும்பி வரும்போது எட்ஜ்காம் அவரை முதல் முதலாகப் பார்த்தாள். அவரும் அவளைப் பார்த்துக் கொண்டார். ஆனால், அவள் தம் ஆபீஸிலிருந்து வெளியே வந்திருந்தால் அவளைச் சற்றுக் கவனமாகப் பார்த்திருப்பார். எட்ஜ்காமுக்கோ, தான் ஒரு தப்பிதம் செய்துவிட்டதாகத் தோன்றியது. தான் குறிப்பிட்ட நாளுக்கு முன்பாகவே அவ்விடத்துக்கு வந்தது ஆபாசமான காரியம் என்றும், மறுநாள் அவரைப் பார்க்கப் போகும்போது அவர் தன்னை அடையாளம் கண்டுகொள்வார் என்றும் எண்ணினாள்.

ஆனால், அவளைத் தம்மிடம் வரப்போகும் குமாஸ்தா என்று அவர் கருதவே இல்லை. அவர் பார்த்த அந்த அடக்கமும் வேண்டுதலும் நிறைந்த அந்நிய முகம் அவருடைய சிந்தனைகளைப் பல வருஷங்களுக்குப் பின்னால் இழுத்துச் சென்றது. அந்த இடத்தை விட்டு நூறு கஜதூரம்கூடப் போயிருக்கமாட்டார். பழையபடியும் தம் நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்ய திரும்பவும் அதே வழியாய் நடந்துவந்தார். ஆனால், அந்த அந்நியப் பெண் மறைந்துவிட்டாள். வெறும் தோட்டம்தான் இருந்தது. அவர் நினைவைவிட்டுப் பிரியாத அதே முகத்தோற்றம் லண்டன் பாலத்திலிருந்து அவரைத் தொடர்ந்து வந்துகொண்டு இருந்தது. மார்டன் லாட்ஜில் அந்தி நேரச் சிற்றுண்டி அருந்துகையிலும் அந்தத் தோற்றம் அங்கே வந்து அமர்ந்திருந்தது. சுகமான நிலா வெளிச்சத்தில் உலாவும் போதும் அது அவரைத் தொடர்ந்து நடந்து வந்தது. கடிகாரம் 12 மணி அடிக்கும்போது அந்தத் தோற்றம் பழைய ஏணிப்படியின்மேல் ஏறிக் காதலைப் புறக்கணிக்கும் கண்களோடும் உதடுகளோடும் நின்றது.

பத்தாம் தேதி வியாழக்கிழமை காலை சரியாக 11 மணிக்கு எட்ஜ்காம் வந்துவிட்டாள். கிளாட் எட்ஜ்காம் என்ற பெயர் மட்டும் எழுதிய ஒரு காகிதத் துண்டை ஜானுடைய வேலைக்காரன் மூலம் கொடுத்தனுப்பினாள். அவன் திரும்பிவந்து, அவளை உள்ளே அழைக்க அவளும் சென்றாள். ஒரு நிமிஷத்தில் ஜான் தம் குமாஸ்தாவை நேருக்கு நேராகவே பார்த்துக் கொண்டார்.

உத்தியோக விஷயமாகப் பேட்டி காண வருவதாயிருந்தால் வருபவருக்குத்தான் படபடப்பும் கஷ்டமுமாக இருக்கும். ஆனால் இப்போது யார் அதிகமாகக் கஷ்டப்பட்டார்கள் என்பதைச்

சொல்லவே முடியாது. எட்ஜ்காம், தான் ஒரு பெண்ணாயிருப்பதைக் கண்டு அவர் ஆச்சரியப்படலாம் என்று நினைத்து, தான் தேவைவிளம்பரத்தைத் தப்பாகப் புரிந்துகொண்டு மனுப்போட்ட விபரத்தை விளக்கியிராவிட்டால், அவருடைய உள்ளத்தில் அந்தப் பழைய இரவின் கனவு—ஆயிரத்தோரு இரவுகளுக்கு முன்னால் ஒரு இடத்தில் கண்ட கனவுதான் தோன்றியிருக்கும்.

ஜானுடைய கண்களுக்கு முன்பாக வந்து நிற்பது ஒரு மாயைத் தோற்றம் அல்ல. எப்படியோ மனதைத் திடப்படுத்திக் கொண்டு, வேலை கிடைக்கும் என்ற நம்பிக்கை காரணமாக மிகவும் ஆவலோடு வந்திருக்கும் ஒரு அழகான ஆங்கிலப் பெண்தான். எட்ஜ்காம், தனக்கு வேலை கிடைக்காவிட்டால் அது, தான் பெண்ணாய்ப் பிறந்த துரதிர்ஷ்டத்தினால்தான் இருக்கலாமே ஒழிய தன் சாமர்த்தியக் குறைவினால் இராது என்று எண்ணினாள். ஆனால், ஜான் அவளைப் பார்ப்பதற்கு முன்னால் ஒரு வேளை பெண் குமாஸ்தா வேண்டாம் என்று நினைத்திருக்கலாம்; அவளைப் பார்த்த பின்பு அவரால் மறுத்துச் சொல்லவே முடியாது.

ஏதோ சில கேள்விகளைக் கேட்டார். அவைகளுக்கு எட்ஜ்காம் தகுந்த முறையில் பதிலளித்ததைக் கண்டு அன்று முதலே அவள் வேலை செய்யலாம் என்று சொல்லிவிட்டார். அவளுக்கு முன்னால் வேலை பார்த்துவந்த குமாஸ்தாவுக்குக் கொடுத்துவந்த சம்பளமே அவளுக்கும் கொடுக்கப்பட்டது. எட்ஜ்காம், பெண்களுக்கு இவ்வளவு சம்பளம் கிடைக்கும் என்று எதிர்பார்க்கவே இல்லை. பெண் குமாஸ்தாக்களுக்குச் சம்பளம் குறைவாகத்தான் இருக்கும். ஆனால் அவர் சம்பள விஷயத்தைப் பற்றிச் சிந்தித்தாரில்லை. எட்ஜ்காமை அவர் வேலைக்கு எடுத்துக் கொண்டிருக்கக்கூடாது என்று வாசகர்கள் சொல்லலாம். ஆனால், அவர் இந்த விஷயத்தில் முற்றிலும் சக்தியற்றுத்தான் இருந்தார். அவளேதான் வேலைக்கு வந்து அமர்ந்து கொண்டாள்.

## 2

ஆபீஸில் வேலை, அதாவது வியாபாரம் ஒழுங்காக நடந்து வந்தது. கணக்கு முடிக்கும் நாட்களில்கூட ஒருவிதப் பரபரப்புக் கிடையாது. உலகம் எக்கேடு கெட்டாலும் ஜானுடைய உள்ளத்தின் சாந்தி குலையவே குலையாது. அவருடைய ஆபீசில் பித்தளையால் செய்யப்பட்ட போர்டு ஒன்று தொங்கிக்கொண்டிருக்கும். அதில் (எழுத்துக்கள்) சூரிய கிரணங்கள்பட்டுப் பிரகாசிக்கும். அவருடைய விலாசத்துக்கு அநேக கடிதங்கள் வரும். அவைகளுக்கு உடனுக்குடன் பதில் கடிதங்கள் எழுதப்படும். இந்தக் குமாஸ்தாவின் நல்வரவால் ஆபீஸில் குறித்த காலத்தில் வேலை பாக்கி விழாமல் செய்து முடிக்கப்படுவதைத்

தவிர, அங்கே ஆபீஸ் ஒழுங்கு முறையில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை.

ஆனால் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை என்று சொல்ல முடியாதுதான். மார்டன் லாட்ஜின் புஷ்பங்கள் வெகு அழகானவை. முன்பெல்லாம் ஜான் அந்த மலர்களில் சிலவற்றைத் தம் கோட்டின் பொத்தான் துவாரங்களில் தினந்தோறும் செருகிக் கொள்வது வழக்கம். ஆனால் இப்பொழுது புஷ்பங்களை அதிகமாக செருகி கொள்வதோடு, ஆபீஸில் அலங்காரமாக வைப்பதற்காக பூக்கள் பறிப்பதும் அவருடைய காலைக்கடன்களுள் ஒன்றாய் விட்டது. அவர் இந்த இனிய கடமையை வெகு கவனமாகத் தாமே நிறைவேற்றி வைப்பார். இந்த மலர்களை வைப்பதற்கு அழகான கண்ணாடிக் கூஜாக்கள் வாங்கவேண்டியிருந்தது. (இந்த வேலைக்கு ஒரு பெண் குமாஸ்தா எவ்வளவு லாயக்கானவள்!) அந்தக் கூஜாக்களை ஒழுங்கான வரிசையில் வைக்கவேண்டியதும் அவசியம். (ஒரு பெண்மணியின் விரல்களுக்குத்தான் எவ்வளவு பொருத்தமான வேலை! இதனால் சில புதுச் செலவுகள் முளைத்தன. ஏதாவது ஒரு பூஞ்செடி பாழாகி வாடத் தொடங்கினால், அது எட்ஜ்காமின் அன்பான கைகளால் தடவிக் கொடுக்கப்பட்டால் பழையபடியும் வளரத் தொடங்கி விடும். ஆகவே, மார்டன் லாட்ஜின் இரண்டு அறைகளிலுமுள்ள மேஜைகள் எட்ஜ்காமின் புஷ்ப சாஸ்திர ஞானத்திற்கும், அவளுடைய கைவேலையின் திறமைக்கும் சான்றுகளாக இலங்கின.

அவளும் ஜானும் இருக்கும் இரண்டு ஆபீஸ் அறைகளுக்கும் இடையில் ஒரு கதவு உண்டு. அது எப்பொழுதும் பாதிக்கு மேலேயே திறந்திருக்கும். அதை அடைக்க வேண்டும் என்று ஒருவரும் ஒருபோதும் நினைத்தது கிடையாது. முன்பு தம் ஆபீஸ் அறைக்குள் குமாஸ்தாக்கள் நுழைந்தால் ஜானுக்கு எரிச்சலாக இருக்கும். இப்போது அந்தக் குணம் அவரை விட்டுப் போய் விட்டது.

இன்னும் ஒரு புது விஷயம் இங்கே வந்து புகுந்தது. வெகு முக்கியமான விஷயம். பகல் நேரத்தில் ஜான் வெளியே சென்றிருக்கும்போது எட்ஜ்காம் தனக்கு, கோப்பை தேநீர் தயார் செய்து கொள்ளுவது வழக்கம். ஒரு சமயத்தில் தாம் மறந்துபோய் வைத்துவிட்டுப் போன சில கடிதங்களை எடுப்பதற்காக ஜான் திரும்பி வந்தபோது அவள் தேநீர் தயாரிப்பதைப் பார்த்துக் கொண்டார். அதுபற்றி அவர் ஒருவித ஆக்ஷேபமும் செய்யவில்லை. ஆனால் ஒன்றே ஒன்று. அதாவது அவள் வழக்கம்போல் தேநீர் தயார் செய்யும் நேரத்திற்கு ஒருமணி முன்னதாகவே தயாரிக்கச் சொன்னார். ஒரு கோப்பைக்குப் பதிலாக, இரண்டு கோப்பைகள் தயார் செய்யவேண்டும் என்றும் சொன்னார். ஆனால் இப்படிப்பட்ட விஷயங்கள் ஏதாவது ஒரு திடீர் நிகழ்ச்சிக்குக் காரணமாய் இருப்பது வழக்கமில்லை. ஒரு சில நாட்களுக்கு அப்புறம்

காப்ட் ஹால் தோட்ட மாளிகையில் முன்பின் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்து விட்டது. ஒரு நாள் ஜானின் கோப்பை, நிறைபத் தேநீரோடு கீழே தவறி விழுந்து உடைந்து விட்டது. அதற்குப் பதிலாக தன் வீட்டிலிருந்து ஒரு பீங்கான் கோப்பையைக் கொண்டுவந்து வைத்துக் கொண்டாள் எட்ஜ்காம். ஷரப்பரி ரோட்டிலுள்ள ஒரு வீட்டின் ஒரு புராதனமான பாத்திரம் காப்ட் ஹால் மாளிகையின் உபயோகத்துக்கு பயன் படுத்தப்பட்டது.

ஆனல் புதிதாக் வந்த இந்தப் பழைய கோப்பையைக் கண்டதும் ஜானுக்குப் பிரமித்துப் போய்விட்டது. அவர் முன்னமேயே அதைப் பார்த்திருக்கிறார். அதில் உள்ள ஒரு சிறு துவாரத்தைக்கொண்டு அதை உடனே அடையாளம் கண்டு கொண்டார். பதினயிரம் கோப்பைகளின் நடுவில் அதை வைத்தாலும் அவர் உடனே கண்டு பிடித்து விடுவார். தம்மைப் பரிகசிக்கும் அக் கோப்பையை இருபது நிமிஷங்கள் வரை கூர்ந்து பார்த்தார். அவருக்கு இருபது வருஷங்களுக்கு முந்திய விஷயங்கள் ஞாபகத்துக்கு வந்தன. முன்பு ஒரு நாள், அதே பீங்கான் கோப்பையில் அவர் தேநீர் அருந்துகையில், எட்ஜ்காமின் தாயார் அவரிடம், தாம் ஒருவருக்கு ஒருவர் பொருத்தமாக இல்லை என்றும், தம் நட்பை நீக்கிவிட்டால் நன்ருக இருக்கும் என்றும் சொன்னள். அதிலிருந்து அவருக்குப் பீங்கான் கோப்பையின் மீது பரிபூரணமான வெறுப்பு, ஆகவே, தற்போது அந்தக் கோப்பையைக் கையில் வாங்கும்போது நழுவ விட்டுவிட்டார். எட்ஜ்காம் தன் வெளி அறைக்குத் திரும்பிப் போனதும் கதவை அடைத்து விட்டார். அப்புறம், தன்னுடைய அஜாக்கிரதையின் காரணத்தை விளக்கவோ, அல்லது அதற்காக மன்னிப்புக் கேட்கவோ வேண்டியிருக்கும் என்று நினைத்தார்.

(அடுத்த இதழில் முடியும்.)

---

## குடும்பப் பட்டாளம்

*பிரயாணி:*—என்ன சிப்பாய் அவர்களே சௌக்கியமா? உங்கள் காம்பில் அரிசி, உளுந்து, விறகு இவைகளெல்லாம் தாராளமாகக் கிடைக்கின்றனவா?

*சிப்பாய்ப் பிரயாணி:*—வேண்டியது கிடைக்கிறது. ஒன்றுக்கும் பஞ்சம் இல்லை.

*பிரயாணி:*—சரி! அப்படியானல் குடும்பத்தோடு பட்டாளத்தில் எடுத்துக் கொள்ளும் ஆபீஸ் எங்கிருக்கிறதென்பதைத் தயவு செய்து சொல்லுங்கள்.

K. C. ஜெயம்.

# நவராத்திரி—சரசுவதி வணக்கம்

க. சிதம்பரம் பிள்ளை



## * நவபங்கி

### ஆசிரிய விருத்தம்

அருள்புரி வாய்கரு ணாகரி யேதிரு
வாரணி யேசேரும்
அணியிழை யேதே மொழியே சிலையென
வழகிய திருநுதலே
ஒருபிர மாமகி ழோவிய மேவரு
மோரன மேதாரும்
உயர்தரு வேதா ரகமே தலமிசை
யுழலுத றகையரசே
திருமக ளார்மரு மாமக ளேயரு
சீரமு தேநேருந்
திவளொளி யேகோ மளமே நிலவிய
செழுமலர் நிறைதிருவே
கருவணு காவகை நாயகி யேகுரு
காரணி யேகாருங்
கலைமக ளேபா ரதியே கலைநல
மெழுதுச ரசுவதியே.

**நவபங்கியைப் பிரிப்பதற் கமைப்பு:—**

அருள்புரி வாய்கரு ணாகரியே —திரு — ஆரணியே
சேரும் அணியிழை யேதே மொழியே—சிலையென— அழகிய திருநுதலே
ஒருபிர மாமகி ழோவியமே —வரும் — ஓரனமே
தாரும் உயர் தருவேதா ரகமே —தலமிசை — உழலுத றகையரசே
திருமக ளார்மரு மாமகளே —அரு — சீரமுதே
நேருந் திவளொளி யேகோமளமே —நிலவிய —செழுமலர் நிறைதிருவே
கருவணு காவகை நாயகியே —குரு — காரணியே
காருங் கலைமகளே—பாரதியே —கலைநலம் — எழுதுச ரசுவதியே.

---

* நவபங்கி யாவது, ஒரு செய்யுள் ஒன்பது செய்யுளாகப் பிரிந்து, அவ்வச் செய்யுள்களின் இலக்கண அமைதி பொருந்த நிற்பது.

நவபங்கியின் பிரிவு:—

### 1. சிந்தடிவஞ்சி விருத்தம்

அருள்புரி வாய்கரு ணாகரியே
ஒருபிர மாமகி ழோவியமே
திருமக ளார்மரு மாமகளே
கருவணு காவகை நாயகியே.

### 2. கலி விருத்தம்

சேரும் அணியிழை யேதே மொழியே
தாரும் உயர்தரு வேதா ரகமே
நேருந் திவளொளி யேகோ மளமே
காருங் கலைமக ளேபா ரதியே.

### 3. குறளடி வஞ்சித்துறை

திருவா ரணியே
வருமோ ரனமே
அருசீ ரமுதே
குருகா ரணியே.

### 4. குறளடி வஞ்சி

அழகிய திருநுதலே
உழலுத நகையரசே
செழுமலர் நிறைதிருவே
எழுதுச ரசுவதியே.

### 5. சிந்தடி வஞ்சி விருத்தம்

சிலையென அழகிய திருநுதலே
தலமிசை உழலுத நகையரசே
நிலவிய செழுமலர் நிறைதிருவே
கலைநலம் எழுதுச ரசுவதியே.

### 6. கட்டளைக் கலித்துறை

அருள்புரி வாய்கரு ணாகரி யேதிரு வாரணியே
ஒருபிர மாமகி ழோவிய மேவரு மோரனமே

திருமக ளார்மரு மாமக ளேயரு சீரமுதே
கருவணு காவகை நாயகி யேகுரு காரணியே.

### 7. கோச்சகக் கலிப்பா

ஆரணியே சேரும் அணியிழையே தேமொழியே
ஓரனமே தாரும் உயர்தருவே தாரகமே
சீரமுதே நேருந் திவளொளியே கோமளமே
காரணியே காருங் கலைமகளே பாரதியே.

### 8. சந்த விருத்தம்

சேரும் அணியிழை யேதே மொழியே
சிலையென அழகிய திருநுதலே
தாரும் உயர்தரு வேதா ரகமே
தலமிசை உழலுத றகையரசே
நேருந் திவளொளி யேகோ மளமே
நிலவிய செழுமலர் நிறைதிருவே
காருங் கலைமக ளேபா ரதியே
கலைநல மெழுதுச ரசுவதியே.

### 9. நேரிசை வெண்பா

ஆரணியே சேரும் அணியிழையே தேமொழியே
காரணியே காருங் கலைமகளே—பாரதியே
சீரமுதே நேருந் திவளொளியே கோமளமே
ஓரனமே தாரும் உயர்.



"போடி! இனி நானவர் பால்
போவேனே?"

# "தேடி வருவார் வலிய"

"செந்தாமரை"



பெண்கள் தங்கள் சௌந்தர்யத்தில் - ஆண்களை வசீகரிப்பதற் கென்றே வாய்த்த தங்கள் தனி யழகில் - அபார நம்பிக்கை கொண்டவர்கள்.

பெண்மை எழிலில் சிக்கி உள்ளம் கள்வெறி கொண்டு மயங்காத ஆடவர்கள் இந்த உலகத்திலேயே இல்லை என்பது பெண்களுக்கு நன்றாகத் தெரியும். 'நம்மிடம் மயங்கி நமக்கு அடிமைப் பட்டு நம் பின்னால் வருகிறவர்கள் தானே இந்த ஆடவர்கள்' என்றெண்ணிப் பெண்கள் அடிக்கடி ஒருவித கர்வம் கொள்வதும் உண்டு.

எப்பொழுதும் ஆண்கள் தான் பெண்களின் அன்பை நாடி அவர்கள் இருக்கும் இடத்தைத் தேடி அலைகிறார்கள். பெண்கள் ஆண்களைத் தேடி வருகிறது மில்லை; அவர்களைச் சுற்றித் திரிகிறது மில்லை.

பெண்கள் ஆடவர்களைத் தேடி வர ஆரம்பித்து விட்டால் அப்புறம் ஆடவர்கள் 'வீஞ்சு கொள்ள' மாட்டார்களா? அப்படி ஆண்கள் வீஞ்சு கொண்டால் பெண்ணின் கௌரவம் மதிப்பு இவை குறைந்துவிடும். குறைந்து விட்டால் கௌரவமும் மதிப்பும் ஆண்களுக்குத்தான். இந்தக் 'குட்டுப் பாடு' பாவம் பெண்களால் ஆட்டிவைக்கப் படும் இந்த ஆண்களுக்குத் தெரியாது. பெண்மை எழில், பெண்மைக் குணம், பெண்மைப் பண்பு ஆகிய இவற்றால் அடியுண்ட ஆண்களுக்கு எப்படித் தெரியும்?

பெண்களிடத்தில் உள்ள அன்பினால் தானே ஆடவர்கள் பெண்களைத் தேடிப் போகிறார்கள். இந்த அன்பு ஆண்களிடத்தில் பெண்களுக்கு இல்லையா என்றால் இல்லாமலில்லை. ஆண்களுக் கிருப்பதை விடப் பன்மடங்கு அதிகமான அன்பு பெண்களுக்கு ஆண்களிட முண்டு. ஆனால் அதை அவர்கள் வெளிப்படையாகக் காட்டிக் கொள்வதில்லை. காதலனைக் காணவேண்டும் என்று தவியாய்த் தவித்துத் துடி துடித்துக் கொண் டிருப்பாள். அவன் வரும் வழிமேல் விழிவைத்து 'எப்போ வருவான்?' என்று தேடிக் கொண் டிருப்பாள். எதேச்சையாக அவன் வந்து விட்டானானால் அவனை நினைத்துத் தவித்ததையோ அவனைத் தேடித் தேடிக் கண்கள் பூத்துப் போனதையோ காட்டிக்கொள்ள மாட்டாள். இது அவளையும் அறியாமல் அவளிடம் குடிகொண் டிருக்கும் ஒரு சுபாவம். பெண்மைக் கென்று வாய்த்த தனிக் குணம்.

இந்த உண்மைகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு அகப் பொருள் பாட்டு, சமீபத்திலே வெளியான 'செண்பகராமன் பள்ளு' என்னும் ஒரு பழைய நூலில் இருக்கிறது.

நாஞ்சில் நாட்டின் தென்கோடியில் கோவைக்குளம் என்று ஒரு துறைமுகப் பட்டினம் இருந்தது. சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய அந்தக் கோவைக் குளத்துக்கு அதிபதியாகச் செண்பகராமன் என்று ஒரு தலைவன் இருந்தான். தலைவன் இருந்தான் என்றால் தலைவி இல்லாமலா இருப்பாள்? அவன் காதலுற்று மணம் செய்து கொண்ட ஒரு தலைவியும் இருந்தாள்.

அவளை மணம் செய்து கொள்வதற்குமுன் அவள் காதலைப் பெறுவதற்கு அவன் பட்ட பாடு அவனுக்குத்தான் தெரியும். எங்கோ ஒரு பூந்தோட்டத்தில் அந்தப் பூங்கொடியாளைக் கண்டு விட்டான் அவன். கண்டதுதான் தாமதம். அவள் அழகில் சொக்கி மயங்கி நின்ற அந்த அழகுப் பித்தனுக்கு அவள் மேல் காதல் பிறந்து விட்டது. நாணிக் கோணி நின்ற அவள் அவன் கருத்தேறி உயிர் ஏறிக் கலந்துவிட்டாள். அப்புறம் கேட்பானேன். பொழுதெல்லாம் அவள் நினைவாக நாள் கணக்காய் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தான். அவளைப் பார்த்து மானே என்றான். மலரே என்றான். தேனே என்றான். சதா அவள் பின்னே திரிந்தான். ஒரு ஆடவன் - கோவைக் குளத்தின் அதிபதி அவன் பின்னும் சென்று கெஞ்சும் குரலில் கொஞ்சுவதையும் அவள் அன்பை நாடிப் பல்லிளிப்பதையும் கண்ட அவளுக்கு அவன் காதலை ஏற்றுக் கொள்ளாம லிருக்க முடியுமா? அவன் மேல் 'இரக்கம்' வைத்து அவன் காதலை ஏற்றுக் கொண்டாள். கலியாணமும் நடந்தது.

கலியாண மான பின்னர் செண்பகராமனுக்கு அவளிடத்தில் உள்ள அன்பைப் பற்றிக் கேட்க வேண்டுமா? அவளை விட்டுப் பிரியாமல் எப்பொழுதும் அவள் பக்கத்திலேயே இருந்தான். அவள் சொல்படி நடந்து அவள் கேட்டதெல்லாம் கொடுத்தான். அவள் மனம் கோணமல் நடந்து அவள் குறிப்பறிந்து ஒழுகினான். அவள் உள்ளம் வருந்தும் வண்ணம் எதையும் சொல்லவும் மாட்டான்; செய்யவும் மாட்டான். அதிகம் சொல்வானேன்! அவளுக்கு அவன் தன் உடல் உயிர், உணர்ச்சி, சுதந்திரம் ஆகிய அனைத்தையும் அடிமைப் படுத்தினான். அவளைப் பற்றியோ எனறால் சொல்ல வேண்டியதில்லை. தன் இன்பத்தைப் பாடித் தன்னைச் சுற்றிக்கொண்டு கிடக்கும் அவன் நிலையைக் கண்டு அவள் பெருமிதங் கொண்டாள்.

தலைவன் தலைவி இவர்களுக் கிடையில் ஊடல் வராம லிருந்தால் இன்பம் சோபிக்குமா? ஊடல் இல்லாமல் இருந்தால் தம்பதிகளுக் கிடையில் உள்ள அன்புக்கு முறுக் கேறுமா?

ஒரு நாள் அவள் என்னமோ ஒரு குற்றம் செய்து விட்டாள். பெரிய குற்ற மொன்று மில்லை. மிக மிகச் சிறிய குற்றம் தான்.

இருந்தாலும் அவனுக்கு அதைப் பொறுக்க முடியவில்லை! அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. ஒரு அற்பக் குற்றத்திற்கு அவன் இவ்வளவு பிரமாதமாகக் கோபித்துக் கொண்டால் அவளுக்குக் கோபம் வராமல் இருக்குமா? அவள் என்ன அவனுக்கு இளைத்தவளா? அவளும் கோபித்துக் கொண்டாள். அவ்வளவு தான். அவர்களுக் கிடையில் ஊடல் வந்து விட்டது. இருவரும் பேச மாட்டார்கள். இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்க மாட்டார்கள். அவனாக வந்து அவளிடம் பேசவும் தயாராக வில்லை. அவளாக வந்து அவனிடம் பேசவும் தயாராகவில்லை. அப்படியானால் இந்த ஊடலைத் தீர்த்து வைப்பது யார்?

தலைவன் தலைவிக் கிடையில் ஒரு தோழி இல்லாமலா போவாள்? உலகமே இருண்டு விட்டதாக எண்ணித் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு இங்கே இருக்கிற தலைவனையும், அங்கே அந்தப் புரத்தில் 'தலையை முட்டிக் கொண்டாலும் முட்டிக்' கொள்வேன். ஆனால், அவரிடத்தில் நானாக வலியச் சென்று பேசமாட்டேன்' என்ற பிடிவாதத்தில் கட்டிலில் கிடந்து புரளும் தலைவியையும் தோழி பார்க்கிறாள். இவர்களுக் கிடையிலுள்ள சண்டையை எப்படித் தீர்த்து வைப்பது? இவர்களை மீண்டும் எப்படிக் கூட்டி வைப்பது? ஊடலைத் தீர்க்கும் வண்ணம் தலைவரிடம் எப்படிச் சொல்வது? சொன்னாலும் தான் அவர் கேட்பாரா? அவர் ஆண்பிள்ளை யல்லவா? தலைவியைக் கண்டு சொல்லலா மென்றால் அவள் விட்டுக் கொடுக்காத மகா பிடிவாதக் காரியாயிற்றே? இந்தத் தர்ம சங்கடத்திற்கு என்ன செய்வது என்று தோழி நினைக்கிறாள். கடைசியில் தலைவியிடம் தான் சென்று சொல்லிப் பார்ப்போமே என்ற முடிவுக்கு வந்தவளாகத் தோழி தலைவியிடம் வருகிறாள். வந்து,

"உன்னைப் போல ஒரு பெண்ணை நான் பார்த்ததே இல்லை அம்மா! கணவன் மனைவி என்றிருந்தால் சண்டை வரத்தான் செய்யும். அதற்காகக் கோபித்துக்கொண்டு நீ அவரிடம் பேசாமல் இருக்கிறாயே? பேசாமல் இருந்தால் அவர் கோபம் மேலும் மேலும் அதிகரிக்காதா? என்னவோ குற்றம் செய்தாய். அதற்காக அவர் உன்னைக் கடிந்து கொண்டார். அவர் கடிந்து கொண்டால் அதைப் பொறுத்துச் சகிக்க வேண்டியது உனது கடமை. அப்படிக் கில்லாமல் நீயும் அவர்மேல் கோபம் கொண்டால் அது ஒழுங்காகுமா? எழுந்திரு. எழுந்திருந்து அவரிடம் போய் அவர் மன வருத்தத்தைத் தீர்க்க முயற்சி செய்" என்கிறாள்.

தோழி இவ்வளவையும் சொன்னாளோ இல்லையோ தலைவி தன் நெஞ்சில் அடைத்து வைத்திருந்த ஆத்திரத்தை எல்லாம் திறந்துவிட ஆரம்பிக்கிறாள்:

"போடி, போ! உனக்கென்ன தெரியும்? நானா அவரிடம் போக வேண்டும்? என்னத்திற்கு? அவருக்கென்ன அகங்காரம்? என்மேல் ஏன் அவருக்கு இவ்வளவு கோபம்? கலியாணம் கழிந்து

வந்த காலத்திலே எவ்வளவோ குற்றங்கள்—மிகப்பெரிய குற்றங்கள் கூடச் செய்திருக்கிறேன். அப்பொழுதெல்லாம் நான் செய்த குற்றங்களை அவர் குற்றங்களாகக் கருதவுமில்லை; என்மீது கோப்பப் படவுமில்லை.........உப்புப் புளி இல்லாமல் சப்பென்று சமைத்துவைத் திருக்கிறேன். 'நன்றாக இல்லையே! வாய்க்கு ருசியாக இல்லையே!' என்று அவர் சொன்னதே கிடையாது. 'எவ்வளவு நேர்த்தியாகச் சமைத்து வைத்திருக்கிறாய்! உண்ண உண்ணத் தெவிட்டாத அமுதம் மாதிரி சுவைக்கிறதே' என்று கூறி நொட்டை யிட்டு நொட்டை யிட்டுச் சாப்பிட்டிருக்கிறார். தாம்பூலம் கொடுக்கும்பொழுது தவறுதலாக நிறைய நிறையச் சுண்ணாம்பை வெற்றிலையிலே தடவிச் சுருட்டிக் கொடுத்திருக்கிறேன். வாங்கித் தின்றதிலே அவர் நாக்குக் கூடப் பொத்திருக்கிறது. இருந்தாலும் என்ன சொல்வார் தெரியுமா? 'வெற்றிலை பாக்கு, கிராம்பு, வாசனைச் சுண்ணாம்பு எல்லாம் கணக்காகச் சேர்த்து அழகாக மடக்கி நேர்த்தியாகச் சுருட்டி இருக்கிறாயே! உன்னைப்போல வெற்றிலை சுருட்டுகிற பெண்கள் தேவ லோகத்தில் கூட இருக்க மாட்டார்கள்போ லிருக்கிறதே!' என்று, இப்படி எல்லாம் சொன்ன அவருக்கு இப்பொழுது நான் ஒரு சின்னக் குற்றம் செய்தால் கூடப் பிடிக்கிறதில்லை! தப்பித் தவறி சிறு குற்றமொன்று செய்து விட்டால் கோபப் படுகிறார். எரிந்து விழுகிறார்......ஆம்! விழத்தானுண்டு! அப்பொழுதெல்லாம் என்னைக் கண்டால் அவருக்கு இனிப்பாக இருந்தது. இப்பொழுது என்னவோ என்னைக் கண்டால் அவருக்குக் கசப்பாக இருக்கிறது." என்று தலைவி கூறுவதாகப் பாவனை.

"மோடி என்ன என்பே ரில்?
மோக முள்ள நாளையில் நான்
கோடி குறை செய்தா லும்
குற்ற மொன்றுங் கொள்ளா ரே!

"என்னிடத்தில் அவருக் கென்ன கோபம்?" என்று தோழியிடம் ஆத்திரத்தோடு கேட்க ஆரம்பித்த அவள் உள்ளத்திலே பழைய இன்ப நிகழ்ச்சிகளைப் பற்றிய ஞாபகம் வருகிறது. வந்ததும் ஆத்திரம் தணிந்து சாந்த மடைகிறாள். அப்படிச் சாந்த மடைகிற அவளை ஒரு இன்ப வேதனை பிடித்துக் கொள்ளுகிறது. "மோடி என்ன என்பேரில்?" என்று சாடி விழுந்து கேட்ட அவள் "கோடி குறை செய்தாலும் குற்றம் ஒன்றும் கொள்ளாரே!" என்று அங்கலாய்த்துக் கொள்ளுகிற பொழுது அவள் மனதில் தேங்கி நின்ற சோகம் கலந்த ஏக்கம் அவள் குரலில் தொனிக்கிறது.

"கோடி குற்றம் செய்த அப்பொழுதும் நீ அவருக்கு இனிப்பாகத்தான் இருந்தாய்! இப்பொழுதும் இனிப்பாகத்தான் இருக்கிறாய்! பிரமாதமாக ஒன்றும் அவர் உன்னிடம் கோபப்பட்டுக் கொள்ளவில்லை. நீதான் அவர் உன்பேரில் கோபப் பட்டுக் கொண்டிருக்கிறார் என்று வீண் கற்பனை செய்துகொண் டிருக்கி

ளுய்! உன் நினைவாகவே இருக்கும் அவரை நீ இப்பொழுதே சென்று பார்த்தால் நான் கூறுவதின் உண்மை விளங்கும். போ. போய் அவருக்கு என்ன வேண்டும் என்று கேள். சும்மா இப்படி இருந்து உன்மனதையும் வருத்தி அவர் மனதையும் வருத்தாதே" என்று சாதுரியமாகப் பேசித், தோழி அவரிடத்தில் அவளை அனுப்பப் பார்க்கிறாள்.

"போடி! என்னை நீ என்ன பைத்தியக்காரி என்று நினைத்துக் கொண்டாயா? இப்படி இதமாக என்னிடம் பேசி என்னை மெது வாக அவரிடம் தள்ளி விட்டு விடலாம் என்று நினைக்கிறாயா? நானு அதற்கு உடன் படுபவள். மாட்டேன். நான் அவரைத் தேடிப் போகவே மாட்டேன். அவர்தான் என் நினைவாக இருக்கி றார் என்று சொல்கிறாயே! அப்படியானால் அவர் என்னைத் தேடி வருவார்" என்கிறாள் தலைவி.

**போடி! இனி நானவர் பால்**
**போவேனோ? வேணு மென்றால்**
**தேடி வரு வார் வலிய**
**செண்பக ராம திபரே!"**

அவரிடம் அவள் போக மாட்டாளாம்! வேண்டு மென்றால் அவளைத் தேடி அவர்—செண்பகராமர் வருவாராம்! அதுவும் அவ ளாகவே வலியத் தேடி வருவாராம்! அவளைத் தேடி அவர் வரு வார் என்பதில் அவளுக்கு எவ்வளவு நம்பிக்கை! என்ன இறு மாப்பு! என்ன பிடிவாதம்! பார்த்தீர்களா?

இப்பொழுது பாட்டை வாசியுங்கள் :

**"மோடி என்ன என்பே றில் ?**
**மோக முன்ன நாளையில் நான்**
**கோடி குறை செய்தா லும்**
**குற்ற மொன்றும் கொள்ளா ரே !**
**போடி ! இனி நானவர் பால்**
**போவே னோ ? வேணு மென்றால்**
**தேடி வரு வார் வலிய**
**செண்பக ராம திபரே !"**

[மோடி—கோபம்]

பாட்டுக்குப் பாவம் வேண்டும் என்று சொல்லுகிறோம். பாவம் என்றால் என்னவென்று சமீபத்தில் ஒரு பத்திரிகாசிரியர் தமது பத்திரிகையில் எழுதி இருந்தார்: "பாவம் என்ற பண்பு சாமான்ய மானதன்று. எழுத்திலே உள்ள அமைப்பு, உச்சரிப்பிலே உள்ள நயம், தொனியிலே உள்ள சுரபேதம், ஆகியவற்றை ரசிக்க வேண் டும்;........இவ்வளவு பண்பும் ஒன்றாகச் சேர்ந்தால் பாவம், பாட்டு, தாளம், அதன் அமைப்பு, அதன் பொருள் இவ்வளவை யும், ஒரு நடன சுந்தரி, தன் இடை அசைவாலும், இன்னோரன்ன பிறவற்றாலும், காட்டுவதைக் கண்டால் பாவம் தெரியும் !" என்று

# எழுத்துக் கலை

கு. ராஜாராம்



நம்முடைய மனதிலுள்ள கருத்துக்களைப் பிறர் அறிவதற்காகச் சொற்களைக் கொண்டு ஒழுங்குபட வரைந்து கொடுப்பதற்குத்தான் எழுதுதல் என்கிறோம். எழுதுவது ஒரு தனிக் கலை.

எழுத்துக் கலைக்கு ஜீவாதாரமானவை எண்ணங்களும், வார்த்தைகளும். மனதில் உதிக்கும் எண்ணங்களை, வார்த்தைகளால் கட்ட வேண்டும். அப்பொழுது வாக்கியங்கள் ஏற்படுகின்றன. இந்த வாக்கியங்கள் தொடர்ச்சியாக வந்து, நமது மனக் கருத்துக்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக அமைகின்றன.

திறம்பட எழுதுவது என்பது இலகுவான காரியம் அல்ல. எழுதும்போது கவனிக்கவேண்டிய விஷயங்கள் நிறைய உள்ளன. இவை யாவற்றையும் நன்கு அறிந்து அதன்படி நடப்பவர்கள் எழுத்துக் கலையில் தேர்ந்தவர்களாக இருப்பார்கள. இவர்களைத் தான் எழுத்தாளர் என்கிறோம்.

ஈட்டி முனையின் சக்தியைவிட எழுத்தாளனின் பேனாமுனை மிகவும் பலம் வாய்ந்தது. எழுத்தாளனின் பேனாமுனையிலிருந்து வெளிப்படும் விஷயங்கள் பல்லாயிரக்கணக்கான மக்களின் மனத்தைக் கவர்ந்து, அவர்களை உணர்ச்சி வெள்ளத்தில் அமிழ்த்தக் கூடியன.

எழுத்தாளன் என்னும் சிற்பி கட்டும் கலைக் கோவிலானது என்றென்றும் நிலைத்து நிற்கக் கூடியது. எழுதிய ஆசிரியனை மறந்தாலும், அவனது எழுத்தை உலகம் என்றும் மறக்காது.

தற்பொழுது தமிழ்நாட்டில் ஏராளமான எழுத்தாளர்கள் தோன்றியுள்ளார்கள். புகழ் பெற்ற ஒரு சிலருக்குத்தான் இலக்கிய உலகில் இடம் கிடைக்கிறது. திறம்பட எழுதுவதில் சிறந்த

---

இந்தப் பாட்டைப் பாருங்கள். கோபம், ஆத்திரம், சோகம், வேதனை—இவை ஒன்றன் பின் ஒன்றாக வந்து பாட்டில் தொனிக்கிறது. கொஞ்சிக் கொஞ்சித் தலையை ஆட்டி ஆட்டித் தோழியிடத்தில் தலைவி கெஞ்சுங் குரலில் பேசுகிற பாவம் பாட்டு முழுதும் வழிந்தோடுகிறது. எதுகையும் மோனையும் அர்த்தமற்ற வெறும் சொல்லடுக்காக மட்டு மில்லாமல் முறுக்கேறப் பெற்று அர்த்த புஷ்டி நிறைந்ததாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறவர்களுக்கு இந்தப் பாட்டு ஒரு எடுத்துக் காட்டு.

மெல்லிய ஒரு அகப் பொருள் நிகழ்ச்சியை மிக நுண்ணிய முறையில் படம் பிடித்துக்காட்டும் இப்பாட்டுப் பொருள் நிறைந்ததாகவும், உணர்ச்சியைக் கிளறி விடுவதாகவும், உள்ளத்துக்கு இன்பம் பயப்பதாகவும் இருக்கிறது. உண்மையான கவிதை அப்படித்தானே இருக்கும்?

வர்கள் சிலர் இருப்பினும் அவர்களை உலகம் இன்னும் சரியாக உணரக் காணோம். அநேக இளம் எழுத்தாளர்கள் எழுதவேண்டும் என்ற ஆசையுடன் துடித்துக்கொண்டிருக்கிறார்கள். அநேகர் தங்கள் பெயர் அச்சில் வரவேண்டுமென்ற ஆசையில் எதையாவது 'காமா சோமா' வென்று எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்புகிறார்கள். அனுப்பிய சில நாட்களில் மதிலில் அடித்த பந்துபோல அவர்கள் எழுதியவை திரும்ப வருவதைக் கண்டு மனம் புழுங்குகிறார்கள்.

திடீரென்று ஒருவன் எழுத்தாளனாகிவிட முடியாது. மெல்ல மெல்ல விடாமுயற்சியினால்தான் வர முடியும். எழுதி எழுதிப் பழகினால் பிறகு தன்னாலே எழுதும் சக்தியை அடையலாம்.

பிரபல ஆங்கில ஆசிரியரான ராபர்ட் லூயிஸ் ஸ்டீவன்ஸன் என்பார் தம்முடைய இளம் பிராயத்திலிருந்தே எழுதப் பழகி வந்தார். எப்பொழுதும் தம் சட்டைப் பையில் படிப்பதற்கு ஒரு புத்தகமும், எழுதுவதற்கு ஒரு நோட்டுப் புத்தகமும் வைத்துக்கொண்டிருப்பார். தெருவில் நடந்து போகும்போதே, தான் காணும் காட்சிகளைப் பொருத்தமான வார்த்தைகளால் வருணித்துக் கொண்டே செல்வாராம். பிறகு சாலையோரத்திலேயே அமர்ந்து வர்ணனைகளைத் தம் நோட்டுப் புத்தகத்தில் எழுதுவாராம். இல்லாவிட்டால் இதற்குமுன் மனனம் செய்துள்ள அருமையான கவிதைகள் அல்லது நாடகங்களை நோட்டில் எழுதிக்கொண்டிருப்பாராம். அவர் சொல்கிறார்: "என்னுடைய பயிற்சிக்கு முக்கியமாக இருந்தது வர்ணிக்கும் வழக்கம்தான்" என்று.

எனினும் இவ்விதப் பயிற்சி அவருக்குத் தேவையான பலனைக் கொடுக்கவில்லையாம். அதனால் வீட்டில் சிறந்த புத்தகங்களைப் படித்துக்கொண்டிருக்கும்போது தாம் காணும் அருமையான வர்ணனைகள், அழகிய வாக்கியங்கள் இவற்றைக் 'காப்பி' அடிக்க ஆரம்பிப்பாராம். முதலில் தோல்வியடைந்தார். எனினும் மனம் தளராது மீண்டும் தொடர்ந்து அவ் வேலையைச் செய்தார். அப்பொழுதும் வெற்றி கிடைக்கவில்லை. இருந்தபோதிலும் விடாமுயற்சியைக் கைவிடாது மறுபடியும் முயற்சித்தார். கடைசியில் எழுதச் சிறிது பழக்கம் ஏற்பட்டதாம்.

தம்முடைய இவ்வகை முயற்சியைப் பற்றிக் கூறிவிட்டு, அவர், "நீங்கள் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் எழுதப் பழகுவதற்கு அதுதான் வழி. நான் அவ்விதம் முயற்சித்துப் பலனடைந்தேனோ, இல்லையோ அதைப் பற்றிக் கவலை இல்லை. எழுதப் பழக மேற்கூறியதுதான் வழி" என்கிறார். ஆங்கில இலக்கியத்தின் அணையா விளக்கான கீட்ஸ் இவ்விதம்தான் பழகினார் என்றும் கூறுகிறார் ஸ்டீவன்ஸன்.

ஸ்டீவன்ஸனைப் போல் விடா முயற்சியுடன் எழுதி எழுதிப் பழகினால்தான் பயிற்சியில் வெற்றியடைய முடியும். எறும்பூரக் கல்லும் தேயுமல்லவா? 'சலியா உழைப்பானது சகல கஷ்டங்களையும் வெல்லும்' என்பது கிரேக்க மொழியிலுள்ள ஒரு வாக்கியம்.

'திடும்' என்று எழுத்தாளனுகிவிட முயற்சிப்பது நல்லதல்ல. ஓட்டப் பந்தயத்தில் ஆமைதானே வெற்றி பெற்றது? ஒரே தாவில் ஓடி முடித்துவிடலாமென்றிருந்த முயல் தோல்வி யுற்றது இல்லையா? அதே போலத்தான் எழுத்துக் கலையிலும்.

அந்தோனி ட்ரோலப் என்னும் சிறந்த ஆங்கில நாவலாசிரியர், எழுத்தாளர்களாக விழையும் இளைஞர்களுக்குக் கொடுக்கும் புத்திமதியில், "ஆத்திரப்பட்டு முயற்சி செய்யக் கூடாது; வக்கீல் குமாஸ்தாவைப்போல் அமர்ந்து இடைவிடாது எழுதிப் பழக வேண்டும்" என்று சொல்லுகிருர்.

நம்முடைய கருத்துக்களுக்குப் பொருத்தமான வார்த்தைகளை உபயோகிப்பது மிகவும் முக்கியம், முன் எழுதிய வார்த்தைகளுக்கும் பின்னல் எழுதும் வார்த்தைகளுக்கும் இடையே விட்டுப் போகாத தொடர்ச்சி இருக்க வேண்டும்.

நீங்கள் முன்னடி யோசித்து உள்ளவைகளைத்தான் எழுத வேண்டும். மேஜையருகில் உட்கார்ந்து கொண்டு, 'என்ன எழுதலாம்' என்று நினைத்துக்கொண் டிருக்கக் கூடாது.

"எழுதும்போது மனதில் உதிக்கும் முதல் வார்த்தைகளை அப்படியே வரைய வேண்டும். எழுதிக்கொண்டு போகும்போதே திருத்திக்கொண் டிருக்கக் கூடாது." என்கிருர் வில்லியம் காப்பெட் என்னும் பேராசிரியர். மேலும் "எண்ணங்கள் (கருத்துக்கள்) வந்துகொண் டிருக்கும் வகைப்படியே எழுதிக்கொண்டு போக வேண்டும்" என்றும் கூறுகிருர்.

கட்டுரையோ, கதையோ எவையாயினும் பத்திகளாகப் பிரிக்கப்பட்டு வரையப் படுகின்றன. இவ்விதம் பாகுபாடு படுத்துவதற்குச் சட்ட திட்டங்கள் ஏற்படுத்துவது முடியாத காரியம். கருத்துக்களின் தொகுதிக்குத் தக்கபடி பத்திகள், அத்தியாயங்கள் இவை அமைபடும்.

நமக்கு நன்ருகத் தெரியாத விஷயத்தைப் பற்றி எழுதப் புகுவது நிரம்பவும் தப்பிதமான செய்கையாகும்; ஆபத்தான காரியங் கூட. மேலும் கூறவேண்டிய சிறு விஷயத்தை அநாவசியமாக அதிகமாய் எழுதுதல் கூடாது என்கிருர் காப்பெட்.

எவரேனும் ஒருவர் ஒரு வார்த்தையின் சரியான பொருளைத் தெரிந்து கொள்ளாமல், தப்பிதமாக உபயோகப் படுத்திஞல் அதை எடுத்துக்கூறி அவர்களைத் திருத்த வேண்டும் என்று சொல்லுகிருர் ஹெர்பர்ட் என்ற ஆசிரியர். பொதுமேடையில் பிரசங்கி பேசும்போது தப்பாக வார்த்தைகளை உபயோகித்தாலும், இடைமறித்து, பிரசங்கியைக் கேள்வி கேட்டுத் திருத்த வேண்டும் என்கிருர். சொல் யுத்தத்தை வீட்டில்கூட நடத்த வேண்டுவது அவசியம் என்று அதே ஹெர்பர்ட் கூறுகிருர்.

இந்தக் கட்டுரையில் நான் எவ்வளவு தூரம் மேற்கூறிய விஷயங்களைக் கடைப்பிடித்து எழுதியுள்ளேனே, தெரியவில்லை. எத்தனை சொற்களை எவ்வளவு தப்பாக உபயோகித்துள்ளேனே? எழுத்துக் கலை என்ன சாமான்யப் பட்டதா?

பாரதியின், 'மூன்று காதல்' ஒரு நல்ல கற்பனை. அந்தக் கற்பனையோடு பின்னும் கொஞ்சம் கற்பனை சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது இந்த,

# மூன்று காதல்

**கே. என். நரசிம்மன்**



"வன்னங்கள் வேற்றுமைப் பட்டால் அதில் மானுடர் வேற்றுமை யில்லை" என்பதை நிரூபிக்கத்தானோ என்னவோ அன்று ஆகாயத்தில் பலவர்ண மேகங்களின் சஞ்சாரம் அதிகமாயிருந்தது. நீல நிறச் சேலை யுடுத்து மஞ்சள் வர்ண முக்காட்டின் மூலம் தனது செவ்விய முகத்தை மறைத்துச் செல்லும் மேகக் காதலியைத் தொடர்ந்து போகும் மேகக் காதலனின் மங்கிய ஊதாநிற ஆடையில் தான் எவ்வளவு அழகு? மற்றும் எத்தனையோ கவர்ச்சியுட னிருந்தது அழகிய தோற்றம்.

வான முகட்டை எட்டிப் பிடித்துத் தழுவ முயற்சித்துத் தோல்வியுறும் நிலப்பரப்பின் நிராசையான தோற்றம் என் முன்னே காட்சி யளித்தது. நான் உட்கார்ந்திருந்த மண்டபத்தின் சாயை சல சல வென்று ஓடும் நதியில் பிரதி பலித்துக் கொண்டிருந்ததும் எனக்குத் தெரிந்தது. ஏன்?—என் எதிரே உட்கார்ந்து கொண்டு ஆழ்ந்த தியானத்தில் லயித்திருந்த அந்த வாலிபனையும் தான் நன்ருகப் பார்க்க முடிந்தது. மாய ஊனக்கண்கள் மாத்திரமல்ல, எனது மனக் கண்ணும் அவனது தேஜஸிலும் தோற்றத்திலும் ஈடுபட்டன. இவ்வளவும் எதற்கு? வான முகட்டினை எட்டிப் பிடிக்க நினைக்கும் நிலப்பரப்பின் நிராசைக் காதலைப் பற்றி நான் இப்பொழுது கவிதை இயற்ற வரவில்லை. அல்லது மேகக் காதலர்களின் காதல் விளையாட்டுகளைப் பற்றி கானம் எழுப்ப முன் வரவில்லை; அவனது காதல் வாழ்க்கையைப் பற்றி—அதுவும் நான் நேரில் பார்த்ததைத் தான் சொல்ல வந்தேன். 'தென்றல் காற்றை நுகர்ந்துகொண்டு', நானும் அவனும் 'தனியான' அந்த 'மண்டபமீதினிலே' அமர்ந்திருந்தோம். ஆற்றங்கரையை நோக்கி ஓடி வரும் ஒரு சிறிய தெரு, மரங்களிடையே லேசாகச் சாயைபோல் எங்களுக்குத் தெரிந்தது.

அரைத் தூக்கமோ அல்லது ஆழ்ந்த யோசனையோ என்று அறியமுடியாத நிலையிலிருந்த அந்த வாலிபன் திடீரென்று பரபரப் படைந்தான். அவனது இச்செய்கை எனக்கு ஆச்சரியத்தை அளித்தது. அவன் அத்துடன் நில்லாமல் அவ்விடத்தை விட்டு நகர முயற்சித்ததும் என் வியப்பு பன்மடங்கு அதிகமாயிற்று. சுற்றிலும் பார்த்தேன். ஒருவரும் எனக்குத் தென்படவில்லை. பின் ஏன் அவன் யாரையோ வரவேற்கச் செல்லுவது போல் போக எத்தனிக்கின்ருன். ஒருவேளை வீட்டுக்குப் போகத்

தான் எழுந்திருந்தானோ? எதற்கும் அதனை அவனிடமே கேட்டு விடுவது நலமல்லவா?

"தம்பி, ஏன் இன்று சீக்கிரமாய்க் கிளம்பி விட்டாய்?" என்று நான் அவனைக் கேட்டேன், பதில் என்னமோ நான் எதிர்பார்த்ததுபோல் உடனே வரவில்லை. ஆனால் "சொல்வோமா, வேண்டாமா?" என்ற மனக் குழப்பத்தின் போராட்டத்தை அவன் முகத்தில் கவனிக்க முடிந்தது.

வெகு நேரத்திற்குப் பிறகு அவன் "காரணமாய்த் தான்" என்றான்.

"என்ன காரணம்?"—இது அதிகப்பிரசங்கமான கேள்வி தான், ஆனாலும் ஆத்திரத்திற்குத் தருமமும் அதர்மமும் தெரிகிறதா என்ன?

"வீட்டு விஷயம்"

இதற்குமேல் நான் அவனை ஒன்றும் கேட்கவில்லை. அதற்குப் பிறகு அவனும் அதிகநேரம் தங்கியிருக்கவில்லை. மறைந்து லேசாகத் தென்படும் வீதியை நோக்கி நடந்தான். விருப்பமான ஒரு பொருளை இழந்துவிட்டதுபோல் மனது, அவன் சென்றதும் சஞ்சலிக்க ஆரம்பித்தது. கண்ணோட்டம் அவனைத் தொடரமுற்பட்டது.

திடீரென்று உண்மை உதயமாய் விட்டது. ஆஹா! இப்பொழுதல்லவா அவன் பரபரப்படைந்ததின் காரணம் தெரிகிறது. ஒருவேளை இந்தக் கிழவனுக்கு இதைப்பற்றித் தெரிந்து என்ன ஆகவேண்டும் என்று எண்ணி என்னிடம் சொல்லாமல் சென்றானோ?

புத்தன் கண்டதுபோல் தீவிர ஆராய்ச்சியின் மூலம் நான் அந்த உண்மையை அறிந்துகொள்ளவில்லை. கடவுள் அளித்த கண்கள்மூலம் தான் கண்டேன். ஆ, அந்த முகத்தை நான் எப்படி மறக்க முடியும்? செந்தாமரையின் செம்மையையும் அலட்சியத்துடன் நோக்கும் அந்த 'அதரங்களின் சிவந்த நிறத்தை நான் எதற்கு ஒப்பிடுவது? முகமெனும் விசும்பில் சஞ்சரிக்கும் பிறைமதியோ என ஐயுறத்தக்க அந்த இளம் புன் முறுவல். தென்றல் போல் ஆடிவரும் அந்த இனிய சரீரம், அதற்கு அழகு அளிப்பதுபோல் கையி லிருக்கும் ஏடு....ஆ, ஆண்டவனே! இவ்வளவு பெரும் அழகைச் சிருஷ்டித்த நீ அதனை வருணிக்கும் ஆற்றலையாவது எங்களுக்கு அளித்திருக்கக் கூடாதா?

நான் இவளை முன்பு எங்கோ பார்த்திருக்கிறேன். ஆம். இவள் கலைகள் போதிக்கும் ஆசிரியை. இவளுக்குத் தெரியாத சாத்திரங்கள் உலகிலேயே இல்லையென்று கூட ஊரில் பேசிக்கொள்கிறார்களே?

இவனுக்கு இவளை எப்படித் தெரியும்? ஓஹோ, இப்படியிருக்கலாம். இவனுக்கும் இளம் வயது. அவளும் அழகி. பின்

கேட்பானேன்? எதற்கும் அவர்கள் சம்பாஷணையைக் கொஞ்சம் கேட்டால் என்ன?

அந்த வீதி முனையில் அவள் நின்றுகொண் டிருந்தாள். அவளது தூய வெள்ளிய 'ஆடை அவளது தேஜஸைப் பன் மடங்கு எடுத்துக் காட்டிற்று. கையில் முன் போலவே ஏடு தரித்திருந்தாள். அவள் அருகில் வந்ததும் "சரஸு" என்று கூப்பிட்டான் அவன். அவள் தன் விழி மூலமே அவனுக்குப் பதில் சொன்னாள். அது எனக்குப் புரியவில்லை. ஆனால் அவனுக்குப் புரிந்துவிட்டது.

"உன் விருப்பப்படியே செய். படி படி, உனது தேவகானத்தையும் மதுரமொழிகளையும் கேட்பதற்கு மனிதர்கள் கொடுத்து வைக்க வேண்டுமே" என்றான் அவன்.

அவன் சொன்னது வாஸ்தவம். அவள் வாய் திறந்ததும்—ஆற்றுமடை திறந்ததுபோல் வருகின்றதே அந்த நாதம் தேவ கானமா அல்லது அதற்கும் மேலான வஸ்துவா? அவள் அந்த ஏடுகளைப் படிக்கும்பொழுது உதிர்ந்த அந்த மதுரச் சொற்கள்—அவைகள் இன்னும் என் செவிகளில் ரீங்காரம் செய்கின்றன. அவைகளில் தான் எவ்வளவு தத்துவங்கள்? எவ்வளவு அரும் பெரும் ஞானோபதேசங்கள்? எவ்வளவு அழியா வரம் பெற்ற இலக்கியங்கள்?

ஒருவழியாக ஏடு படிக்கும் கட்டம் முடிந்து சிருங்கார ரஸக் கட்டம் ஆரம்பமாயிற்று.

"தீர்ந்து விட்டது" என்றாள் அவள்.

"தீரவில்லை" என்றான் அவன்.

"ஏன்? நீதான் பாரேன். ஏடு தீர்ந்துவிட்டது. ஆனால்...... என் ஆசை"

"அப்படி யென்றால்?"

"அதுவா......உனக்கு ஸத்தியமாய்த் தெரியாதா?"

"ஸத்தியமாய்"

"அப்படியானால் நீ அதைக் கட்டாயம் தெரிந்துகொள்ள வேண்டும். இப்படிவா, அருகில், சொல்கிறேன்"

அந்தப் பெண் ஒரு அடிகூட முன் நகரவில்லை. ஆனால், அதற்குப் பதிலாக அவன் அவள் பக்கமாய் நகர்ந்து, "இப்படிக் கூடி மகிழ்வது தான்" என்று சொல்லி அவளைத் தன்னோடு அணைத்துக்கொள்ள முயன்றான். ஆனால் அந்தப் போக்கிரிப் பெண் அவனது பிடிக்குட்படாமல் சாமர்த்தியமாகத் தப்பித்துக்கொண்டாள்.

அவனது முகத்தில் ஏமாற்றத்தின் சாயை படர்ந்தது. ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே அவன், "அடி என்னோடிணங்கி மணம் புரிவாய்" என்றான். பாவம்! 'விழிக் கோணத்

திலே நகை காட்டி' அவள் மறைந்து விட்டாள். இதுதான் அவள் அவனுக் களித்த பதில்.

மேற்படி சம்பவம் நடந்து எத்தனையோ நாட்கள் கடந்து விட்டன. அவர்களது காதல் இந்தச் சம்பவத்துடனேயே முற்றுப் புள்ளி யடைந்திருந்தால் அவன் ஒருவாறு மனம் தேறி யிருப்பான். ஆனால் அந்தப் பொல்லாத கன்னி அடிக்கடி, அவனிடம் வருவாள். அவள் சும்மா வந்தால் பரவாயில்லையே! கவிதையும் கொண்டு வருவாள். அவள் சொல்லுவது அவ்வளவையும் பொறுமையுடன் நிதானமாய்க் கேட்டுக் கொண்டிருப்பான் அவன். கடைசியில், அவனது சொற்பொழிவு முடிந்தவுடன் தனது அவாவினைத் துணிந்து கேட்டுவிடுவான். அதற்கு மறுமொழியாக அந்த அணங்கு புன்னகை பூத்து மறைந்து விடுவாள். இது சகஜமாக அடிக்கடி நிகழும் காதல் நாடகம். 'இந் நிலையினிலே' அவன் இந்தக் காதல் பாதையில் இன்பம் என்ற குறிக்கோளை நோக்கி நடக்கும் பொழுது, அவனது வழியில் குறுக்கிட்டது மற்றோர் பாதை. எவ் வழியில் செல்வதென்று திகைத்தான் அவன்.

## 2

"வாழ்க்கையே இருண்டுவிட்டது. எனது வாழ்வின் ஒளியே அணைந்துவிட்டது. காதலில் ஏமாற்றம் உண்டான பிறகு வாழ்வு ஒரு வரண்ட பாலைவனம் தானே? அதில் எங்காவது சாரம் உண்டா?" என்றெல்லாம் ஏங்கினான் அந்த வாலிபன். "அவள் மீது சென்ற நாட்டம் இனி வேறு யார்மீதாவது விழுமா?" என்று வீம்பு பேசினான் அவன். அவனது கர்வத்தை அடக்கத்தான் அவனது இரண்டாம் காதல் ஆரம்பமாயிற்றோ, என்னவோ? அது எனக்குத் தெரியாது.

அதே ஆற்றங்கரை மண்டபம். ஜில்லென்ற காற்று ஆற்றின் நீரைத் தழுவிக்கொண்டு, மறையும் ஆதவனை நோக்கிச் செல்லும் அதே நேரம் தான்.

என் அருகில் அமர்ந்திருந்த அவனது முகத்தில் ஒரு சௌந்தர்யம் உண்டாயிற்று. திடீரென்று அந்தப் பொலிவு தோன்றக் காரணம் என்ன? பேயால் அறையப் பட்டவன் போல் அமர்ந்திருந்தவனின் முகத்தில் பொலிவு தோன்றியதன் காரணம் எனக்கு உடனே தெரிந்து விட்டது.

அதோ அந் நதியிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொண்டு வருகிறார்களே அந்தச் சுந்தரிகளில் ஒருத்தி தான் அவனது உள்ளத்தைக் கொள்ளை கொண் டிருக்கவேண்டும். ஆமாம் செந்நிறத்திற்கே இருப்பிடம் போன்று பொலிகின்ற அந்த வனிதையிடத்தில் தான் அவன் மோகம்—இல்லை காதல் கொண்டுவிட்டான். 'அவள் சோதி முகத்தில் அழகினைக் கண்டு' தனது சிந்தையை அவளிடத்தில் பறி கொடுத்து விட்டான்.

அந் நங்கையும் ஒரு குறும்புக்காரப் பெண்தான் போலிருக்கிறது. வழியில் காத்துத் தவங்கிடக்கும் அவனிடத்தில் பேச்சும் கொடுத்து விட்டாள். அவளை எனக்கு முன்பே தெரியும். அவளைக் 'காட்டு வழிகளிலே' யுள்ள கள்ளர்களுடன் சல்லாபம் செய்து கொண் டிருக்கும் பொழுது பார்த்திருக்கிறேன். தனக்கு வெறுப்பு ஏற்பட்டுவிட்டால் தனது காதலனை நய வஞ்சகத்தால் ஒழித்துவிட அவள் தயங்க மாட்டாள். அந்த வனிதை யாரிடத்திலாவது காதல் கொண்டு அதிக நாள் தங்கியிருந்ததை நான் கண்டதே யில்லை.

ஆகவே, அவளுடன் அவன் பேசியதைக் கேட்கவே நான் முற்படவில்லை. ஆயினும், அவளுடன் அவன் ஆடிய காதல் நாடகத்தை அவனே எனக்கு நேரில் சொன்னான். "அவள் செந்திரு வெனப் பெயர் சொல்லினள்; அந்தத் தின முதலா, நெஞ்சம் ஆரத் தழுவிட வேண்டுகின்றேனம்மா" என்றெல்லாம் புலம்பினான். மேலும் அவன் சொன்னான்:

"புன்னகை செய் திடுவாள்;—அற்றைப்
போது முழுது மகிழ்ந்திருப்பேன்; சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள்;—அந்த
மோகத்திலே தலை சுற்றிடுங் காண்; பின்னர்
என்ன பிழைகள் கண்டோ—அவள்
என்னைப் புறக்கணித் தேகிடுவாள், அங்கு
சின்னமும் பின்னமுமா—மனஞ்
சிந்தியுள மிக நொந்திடு வேனம்மா"

பாவம்! தனது காதல் வாழ்க்கையிலே மாபெரும் இரண்டாம் தோல்வி இது என்று எண்ணிய அவ் வாலிபனது மனோநிலையை நான் எவ்விதம் எடுத்துரைக்கக் கூடும்? அவனது தேக நிலையும் நாளுக்கு நாள் க்ஷீணித்து வந்தது. காதல் ஜுரம் அவனை வெகு தீவிரமாய்ப் பற்றிவிட்டது. இரவெல்லாம் அவன் தூங்குவதேயில்லை. ஏதாவது பிதற்றிக்கொண்டே யிருப்பான். செந்திருவும் சரஸ்வதியும் அவன் கண்கள் முன் அநவரதமும் காட்சி யளித்துக் கொண்டிருந்தார்கள். அவனைப் பார்க்க எனக்குப் பரிதாபகரமாயிருந்தது. "அவனது வாழ்விலே அவன் மீண்டும் சாந்தி பெற ஒரு வழிதா னிருக்கின்றது. ஆம். அது இதுதான். அவன் மற்று மொருமுறை யாரிடமாவது காதல் கொள்ளவேண்டும். அந்தக் காதல், அவனது கடந்த வாழ்க்கையை மறக்க அடிக்கக் கூடியதாயும், ஏமாற்ற மளிக்காததாயும் இருக்க வேண்டும். கடவுளே! அவனுக்கு நீ ஒரு வழி காட்டக்கூடாதா?" என்று ஆண்டவனிடம் அந்தரங்கமாகப் பிரார்த்தனை செய்தேன். என் பிரார்த்தனையும் பலித்தது.

### 3

நள்ளிரவு. சுற்றிலும் மையிருட்டு. எங்கிருந்தோ ஆந்தை வீறிட்டு அலறும் சப்தம் கேட்டது. இடை யிடையே ஆகா

யத்தை அண்ணார்ந்து நோக்கிக் கொண்டு ஊளையிடும் நாய்களின் சப்தம் அந் நீளிரவின் அமைதியைப் பங்கப் படுத்தின.

அதே ஆற்றங்கரை மண்டபம். அதில் நானும் அவனும் படுத்துக் கொண் டிருந்தோம். எதிரே காளி கோயில். "கரிய இருளைவிட் நான்தான் கருமை" என்று தெரியப் படுத்துவது போல் அருகில் ஓடிக்கொண் டிருந்தது ஆற்றின் தண்ணீர். அதைவிட நான்தான் கருமை என்று கொக்கரித்தது தூரத்தி லிருந்த ஒரு பாழடைந்த மடம். "கருமைக்குப் பிறப்பிடமே நான் தான் என்பதை மறந்துவிட்டீர்களோ?" என்றது நீள் விசும்பு. "ஹும் கருமைக்கு எல்லோரும் என்னிடம் கடன் வாங்க வேண் டும்" என்று ஹுங்காரம் செய்தது காளி கோயில்.

திடீரென நாங்கள் இருவரும் திடுக்கிட்டோம். எங்களுக் கெதிரில் தென்பட்ட காட்சி எங்களைத் திடுக்கிடச் செய்து, மனதை யூடுருவிச் சென்றது. இவ்வளவு நேரம், தான் தான் கருமை என்று ஜம்பம் அடித்துக்கொண்ட அவ்வளவும் வெட்கிப் போகும்படியான கரும் வடிவ மொன்றை நான் அப்பொழுது கண்டேன்.

ஆம். அந்தக் கருமையைக் காளி கோயிலை நோக்கி நடந்து கொண்டிருக்கும் அந்தக் கன்னியிடத்தில் தான் கண்டேன். கரு மையில் அழகுண்டு என்பது எனக்கு அப்பொழுதுதான் தெரிய வந்தது. அந்தக் கன்னி வடிவத்தின் கரிய நிறத்தில் தான் எவ்வ ளவு கவர்ச்சி! எனது மனதில் ஒரு புரட்சி தோன்றுவதை, நான் அப்பொழுது உணர்ந்தேன். அவள் அழகுக்கு முன் என் மனது பணிந்து விட்டது. எனது கிழவயதால் என் இருதயக் கிளர்ச் சியைத் தடைசெய்ய முடியவில்லை. விளக்கில் அகப்பட்ட விட்டில் பூச்சிபோல் துடித்தது என் இதயம். என் நிலையே இவ்விதம் என்றால் அவனைப் பற்றிக் கேட்பானேன்! சிறிதுநேரம் உட்கார்ந் திருந்த பிறகு அவன் எழுந்து அவள் இருந்த பக்கம் நகர ஆரம் பித்தான். எனக்கும் படுக்கையில் இருப்புக்கொள்ள வில்லை. எழுந்து நானும் அவனைப் பின் தொடர்ந்தேன். திடீரென நாங் கள் இருவரும் ஸ்தம்பித்து நின்றுவிட்டோம். ஆஹா! இவள் எங்கள் அன்னை யல்லவா! ஜகன் மாதாவல்லவா!! என்னையே மறந்து பக்திப் பரவசத்தில் ஈடுபட்ட என் செவிகளில் ஒரு கீதத் தின் நாதம் வந்து விழுந்தது.

---

## பார்த்துக்கொள்ளுதல்

எஜமான்:—(வேலைக்காரனைப் பார்த்து, ஏண்டா முருகா, உன்னை உன் மாமா முன்னைவிட இப்போ நல்லா பார்த்துக் கிறாங்களா?

முருகன்:—(விசனமாய்) எதுங்க! முன்னே யானும் நல்லாப் பாத்தின் டிருந்தாரு. இப்போதான் கண் தெரியலிங்களே!

—கே. ஏ. சத்தார்.

காதலை, ஒரு அசைக்க முடியாத பண்பு என்றும், தெய்வீக மான தென்றும் தலை முறை தலை முறையாகக் கதைத்து வந்தோம். ஆனால் பதவி வேட்டையும், பண ஆசையும் பிடித்த இந்த சமூகச் சந்தையிலே அது எவ்வளவு விலை மதிப்பற்ற கழிவுச் சரக்காகி விட்டது, பாருங்கள் !

# மனமே படு.

"கனி"



"கர்ம சண்டாளன் முதலைக் கைநீட்டி வாங்குபவன் வைத்தியன்" என்று கதைக்கிறது சாஸ்திரம். ஆனால் வைத்தியனே கர்ம சண்டாளனாகும்போது......கர்மத்தால் சண்டாளனானவன் தானே நான்! எத்தனை பேருடைய கர்மங்களையோ போக்கியதனால் நான் சண்டாளனாகிவிட வில்லை. என்னையும் உலகம் பரோபகாரி, மக்கள் துயர் நீக்குவோன், தர்ம சிந்தனை நிறைந்தவன், ஏழைகளிடம் பணமே வாங்காத டாக்டர் என்றெல்லாம் என் காதுக்குக் கேட்டும் கேட்காமலும் புகழ்ந்தது. ஆனால் பயித்தியக்கார உலகம், என் உண்மை உருவை அறிந்து கொள்ள வில்லை! அது மட்டுமா அறிந்துகொள்ள வில்லை? 'உன்னை அறி' என்று வேதாந்தம் விளம்புகிறது; புத்த மதம் போதிக்கிறது. என்னை நான் அறிந்திருந்தால் ஞானியாகி இருப்பேனே? என்னை நானே அறிந்து கொள்ளவில்லை. செல்வாக்குத் திரை "என்னை" மறைத்தது. திரையிலுள்ள அழகிய வேலைப்பாடு தான் வெளியோர் கண்களுக்குப் பட்டது. எல் கண்களிலும் அதுதான் பட்டது.

இன்று மட்டும் அந்த ஜோதிடன் வந்தால் அவனைத் தொட்டுக் கும்பிடுவேன். நான் மாணவனாக இருக்கும் போது அவன் எவ்வளவு தீர்க்க தரிசனமாகச் சொன்னான்! "இது நீசம் பெற்ற ஜாதகம்" என்றான். "நீசமா! என் ஜாதகத்திலா?" நான் சிரித்தேன். "பரோபகாரமே என் லக்ஷியமாகக் கொள்ள நினைத்திருக்கும் நானா நீசனாவேன்? மற்றோர்க்குச் சேவை செய்வதற்காகவே டாக்டர் பரீக்ஷையில் இறங்கினேனே! நானா சண்டாளனாவேன்? உம். இது வெறும் ஹம்பக்." எனக்கு ஜோதிட நம்பிக்கை குறைந்தது.

ஆனால் என் நெஞ்சை அறுக்கும் அந் நிகழ்ச்சியல்லவா, அந்த ஜோதிடனைக்கூட நினைக்கத் தூண்டுகிறது? "பழைய ஞாபகம் என்ற நெருப்பில் தான் நம் பாவங்களைப் பொசுக்க வேண்டும்" என்றார் ஒரு பேராசிரியர். என் பாவமே, பொசுங்கு; எரி, எரிந்து சாம்பலாகப் போ. மனமே, படு! வேண்டும் உனக்கு! நன்றாகப் படு! ஆனாலும் 'நீ சண்டாளன்' என்று அந்த ஆத்மா எழுப்பும் குரல் ஓயுமா?

ஹூம். என் பரோபகாரத்திலேயே ஒளித்திருந்த நீசனின் நிழலை நான் காணுமல் போனேன். இல்லை, என் பரோபகாரத்தைக் குற்றஞ் சொல்வானேன்? அது மாசற்றது. நிஷ்களங்கமானது. ஆனால் ஆசை என்னும் சைத்தானல்லவா என்னை ஆட்டி வைத்து விட்டான்; என் மனிதத் தன்மையை ஓநாய் உருக் கொள்ளச் செய்து விட்டான்! இதெல்லாம் இன்று உணருகிறேன், அதிகார மாயை என்ற திரை விலகிய பின். அன்று, பதவி கிடைக்கும் என்ற ஆசையில்—பணம் பெருகும் என்ற வேட்கையில்—அந்தஸ்து உயரும் என்ற அவாவில் இதெல்லாம் மங்கிப் போய் விட்டன.

"அநாதைக் குழந்தை, தகப்பனற்ற பெண், வந்து பாருங்கள்" என்ற அழைப்பை ஏற்றல்லவா அவளைப் பார்க்கச் சென்றேன்? வாடிய பூங்கொடியென அவள் துவண்டு கிடந்தாள் ஒரு கந்தைப் பாயில். என்னைப் பார்த்ததும் அவள் கண்களில் ஒரு ஒளி! அந்த நிலைமையிலும் அவள் கண்களில் தான் என்ன குறுகுறுப்பு? வானத்தில் மலர்ந்து வாடும் மலர் ரசிகனின் கண்களில் பட்டது போன்றல்லவா நினைத்தேன். என் இளமையுள்ளத்தை இழுக்கும் சக்தியை அங்கே கண்டேன். அவளைத் தொடும்போது நான் ஒரு வைத்தியனாக இருக்கவில்லை; பயித்தியமாகத் தென்பட்டேன். இது என்ன புது உணர்ச்சி!......

எத்தனையோ தாய்மார்களைத் தொட்டு வைத்தியஞ் செய்திருக்கிறேன். எத்தனையோ பெண்களின் ரணத்தை அறுத்து மருந்து வைத்துக் கட்டி இருக்கிறேன். கல்லூரி ஆஸ்பத்திரியில் எத்தனையோ பெண் பிரேதங்களின் உடம்புகளை அலசிப் பார்த்திருக்கிறேன். அப்போதெல்லாம் நினைப்பதுண்டு, "என்ன வாழ்க்கை இது! சே, இந்த எலும்புக்கும் தோலுக்குமா மனிதன் இப்படி ஆசைப்படுகிறான்! 'நாரீ ஸ்தனபர.....தேகம் மாம்ஸ வஸாதி' என்ற சங்கரர் வாக்கைப் பெரிய ஞானிபோல் நம்பினேன். "எத்தனை சிக்கல்களைக் கொண்ட எலும்புக் கூடு! இதற்காகவா இளைஞன் இப்படித் தன்னை மறந்து திரிகிறான்? இந்த வாழ்க்கையே வேண்டாம்" என்று ஒரு நவீன பட்டினத்தாராய் நடந்தேன். ஒன்றை மட்டும் நான் அப்போதெல்லாம் மறந்துவிட்டிருந்தேன்......

புஸ்தகப் படிப்பைக் குறை கூறுபவர்களெல்லாம் ஒன்றை மறந்து விடுவதுண்டு. அதாவது ஏட்டுப் படிப்பு ஒன்றுக்குமே பயனற்றது; அது பிழைப்புக் காகாது; உழைக்க வழி சொல்லித் தராது என்று ஏட்டுப் படிப்பால் பெரியவர்களானவர்களே சொல்வதுண்டு. அந்த ஏட்டுப் படிப்புத் தன்னிடம் எவ்வளவு தூரம் மனித உணர்ச்சியைத் தூண்டிவிட்டது. அது எப்படித் தான் மற்றோர்க்கு இரக்கங் காட்டுங் குணத்தை வளர்த்தது, தன் மனத்தையும் அறிவையும் பெரிதாக்க அதுதான் காரண கர்த்தாவாக இருந்தது என்பவற்றை மறந்துவிடுவார்கள் அவர்கள். எனக்கும் அவர்களுக்கும் ஒரு வித்தியாசமிருந்தது: அவர்

கள் தாங்கள் பயன் பெற்றபின் அதைத் தூற்றினர்: நான் அனுபவம் பெருத முன்னரே—நானும் அந்த எலும்புக்களோடும் பிரேதங்களோடும் அனுபவம் பெற்றவன் தானே—போலி அனுபவம்!—பெண்மையை வெறுத்தேன். மனித வாழ்க்கையிலே ஒருவருக் கொருவர் ஆதரவாக இருக்கத்தான் கடவுள் ஆணையும் பெண்ணையும் படைத்திருக்கிருர். ஆண் சிவம்; பெண் சக்தி. சக்தியை நோக்கிச் சிவம் பாய்கிறது; ஜகத்தொழில் நடக்கிறது. என்ற உண்மைகள் அப்போது என் மனதில் உறைக்கவில்லை.

அப்போது என் நண்பன் ஒருவன் ஒரு கதை சொல்வான். பிரம்மா உலகைப் படைத்துவிட்டு ஒரு கவிஞனைப் படைத்தானும். 'உலகைப் போய்ப் பாடு' என்று அவனை அனுப்பினனும். சில நாட்களில் கவிஞன் பிரம்மாவிடம் திரும்பினனும். "உலகில் எனக்குப் பாடுவதற்கு என்ன இருக்கிறது? உலகம் வெறுத்துப் போய் விட்டது" என்றுனும். அப்போதுதான் பிரம்மாவுக்குப் பெண்ணைப் படைக்காதது நினைவு வந்ததாம். தன் சிருஷ்டித் திறமையெல்லாங் கொண்டு ஒரு பெண்ணைச் சிருஷ்டித்தானும். அவளை உலகிற் கனுப்பினனும். பிறகு கவிஞனைப் பார்த்து, "இப்போது உலகைப் போய்ப் பாடு" என்றுனும். உலகத்துக்குப் போன கவிஞன் திரும்பி வரவே இல்லையாம். இதை நான் கேட்டதும் சிரிப்பேன். "ருக்மாங்கத ராஜனை மயக்கப் பிரம்மா ஒரு மோகினியைச் சிருஷ்டித்தான்,யமனுடைய வேண்டுகோளுக்கு இணங்கி. அதுபோல் இந்தப் பெண்ணின் உதவிகொண்டு கவிஞன் எமலோகம் போய் இருப்பான். அதுதான் திரும்பவில்லை பிரம்மலோகத்திற்கு" என்பேன். "சக்தியின்றேல் வாழ்க்கை ரஸமின்று என்பதை ஒரு நாள் உணர்வாய்" என்பான்......

அதையும் உணர்ந்தேன். பாழ்நிலமான என் உள்ளத்தில் புத்துணர்ச்சி என்ற பயிர் தழைத்தது. அதற்கு விதை யூன்றி அன்பு நீர் பாய்ச்சினுள் அந்த சரோஜம். வஸந்த ருதுவின் வரவு நோக்கிக் கூவும் குயில் போல் என் மனமும் அறியாத இன்பத்தின் வரவு நோக்கிக் கூவிற்று. அந்தப் பெண்ணிடம் மனஞ் சென்றது. நீரற்று வெளிறின பயிர்க்கு மழைத்துளி போலிருந்தது என் பார்வை அப் பாவைக்கு. அவள் வதனத்தில் ஒரு புன்னகை. அக் குழிந்த கன்னத்தை அழகு படுத்தித் தவழ்ந்தது. என் மருந்து அவளைக் குணப்படுத்தி வந்தது.

அன்று நான் அந்தக் குடிசையில் நுழையும் போது அவள் தாய் இல்லை. எங்கேயோ போயிருந்தாள். என்னைக் கண்டதும் தலை தூக்கினுள். மெல்ல எழுந்து உட்கார்ந்தாள். அவள் அருகில் நான் அமர்ந்தேன். அவள் முன் என் அந்தஸ்தை எல்லாம் மூட்டை கட்டித் தூர வைத்துவிட்டேன். அவள் மெல்லிய பூங் கரங்கள் என் கழுத்தைச் சுற்றின, துவண்ட பூங்கொடி கொம்பைச் சுற்றுவதுபோல். இந்த ஆதித்தன் அந்த சரோஜத்துள் மறைந்தேன்.

என் திரை விலகுவது போல் தோன்றிற்று. என் இளமை யின் மாய்கையில் நான் என்னை மறந்ததாக நினைத்தேன். அட பாவி எண்ணங்களா, நீங்கள் தான் 'என்னைக்' கொன்றீர்கள்; இல்லை, என்னை ஓநாயாக்கினீர்கள். அதற்கு உதவிற்று அன்று வந்த கடிதம். பின்னால் என் மாமனாராக ஆனவரிட மிருந்து வந்தது அது. அவர் பெண்ணை மணப்பதானால் எனக்கு மெடிகல் ஆபீஸர் வேலை வாங்கித் தருவாராம். வேற்று ஜாதியைச் சார்ந்த அநாதை சரோஜம் என் அந்தஸ்தையும் பதவியையும் நாசமாக்கி விடுவாள்; உற்றார் உறவினர் உறவைத் தொலைத்து விடுவாள் என்று என் ஓநாய் உள்ளம் எண்ணமிட் டது; என் மனதுள் சைத்தான் தன் ஆட்சியை நிலை நிறுத்தி னான்; அங்கு சரோஜம் ஊன்றின அன்புப் பயிரை வேரோடு பிடுங்கி எறிந்தான். அட பாவி மனமே! உலகத்தில் பணத்தை விடப், பதவியைவிட, மேலான வஸ்து ஒன்று உண்டு என்பதை நீ சிறிதாவது யோசித்தாயா? வேண்டும் உனக்கு, படு நன்றாக!

மறுநாள் சரோஜத்தைப் பார்க்கப் போனேன். அவள் வசந் தங் கண்ட இலையுதிர் மரம்போல் புது இரத்தந் தளிர்த்து உல விக் கொண் டிருந்தாள். அந்தப் பாவம் அறியா உள்ளத்தை வஞ்சிக்க எப்படித்தான் துணிந்தேனோ! பாவி மனமே! 'நீசன், சண்டாளன்' என்று இப்போது கத்துகிறாய்? அன்று நீ ஏன் கல்லைப்போல் கிடந்தாய்? நீ அவளை அந்தரத்தில் விட்டுச் சென் றால் நாளை நம்பிக்கை மோசஞ் செய்த உன்னைக் காட்டிக் கொடுத் துக் கேவலத்திற் குள்ளாக்கி விடுவாளென்று அஞ்சித் தானே அந்த முடிவுக்கு வந்தாய்! உன் பதவி உயர்வுக்கு, அந்தஸ்திற் குப் பங்கம் விளைவிக்கும் செயல் எதையும் செய்து விடுவாள் என்று பயந்து தானே அக் குரூர முடிவிற்கு வந்தாய்! அதனா லல்லவா அவளுடம்பில் இன்னும் தெம்பு ஏற்படவில்லையென் றும், அவளுக்கு ஒரு இஞ்செக்‌ஷன் கொடுத்துவிட்டால் சரியாய் விடுமென்றும் சொன்னாய்? அடபாவி! என் தொழிலையே மாசு செய்வதை நான் உணரவில்லையே! எலும்புருக்கி மருந்தை அவள் இரத்தத்தில் கலந்தேன்—ஊசி மூலம்! என்னை நான் சமாதானஞ் செய்து கொண்டேன்—ஒரு நோயாளிக்கு நாம் மருந்து கொடுத் தோம், குணமாகாமல் போனதுபோல் இதையும் வைத்துக்கொள் வோம் என்று.

அந்தக் காளிதாசன் வருணனை அப்போது எனக்கு ரசிக்க வில்லை. இப்போது அவன் வருணிக்கும் தாமரையைப் பறித் தெறிந்த மதயானை நான் என்று உணர்கின்றேன். இந்த டாக்டர் ஆதித்தனை அந்த சரோஜம் உண்மை ஆதித்தனாக நினைத்தாள்; தன்னை சரோஜ மலராக எண்ணினாள். அந்த சரோஜத்தின் இத யத்தில் மகிழ்ச்சி வண்டு இன்பத்தேன் பருகி மெய்மறந்திருந்தது. ஆதித்தன் மறைந்தது கண்டு அம் மலர் குவிந்தது. அதனுள் இருந்த மகிழ்ச்சி வண்டும் வெளியில் உலவ முடியாமல் சிறைப் பட்டது. விடிவு காலம் நெருங்குகிறது. "ஆதித்தன் வருவான்.

கா்ம் மலர்வோம்" என்று எண்ணியது சரோஜம். மகிழ்ச்சி வண்டு, 'பரந்த உலகைக் காண்போம். ஆதித்தன் ஒளியில் குதூகலித்து ரீங்காரஞ் செய்வோம்' என்று கனவு கண்டது. ஆனால் ஆதித்தனா வந்தான்? பெயரில் குறைவில்லை! எமன்! ஆதித்தன் மதயானை உருவில் தான் வந்தான் குவிந்த சரோஜத்தைப் பறித் தெறிய; அவள் மகிழ்ச்சி வண்டோடு அவளையும் மண்ணாக்க, அவளை எலும்புருக்கிநோய் எலும்பாக்கியது...ஹூம்.

அதற்கும் பின் அவளைப் பற்றி நினைத்தேனா? என் அந்தஸ்தும் என் உத்தியோக உயர்வும் இந்தப் பதினைந்து வருஷங்களாக என்னைக் கப்பிக் கொண்டன. ஆனால் இன்று?......மனைவியை இழந்து, குழந்தைக ளற்று என் பாபமே துணையாய் உழல்கிறேன். இன்னும் உடம்பு கிழடு தட்டாவிட்டாலும் மனம் கிழத் தன்மை யடைந்துவிட்டது. எதிலும், என் வைத்தியத்திலேயே, எனக்கு நம்பிக்கை யற்றுவிட்டது. நான் ஞானியாகவோ யோகியாகவோ மாறிவிடவில்லை; மனிதனாகவே, வெறிபிடித்த மனிதனாகவே, இருக்கிறேன். காரணம் நான் சண்டாளன். என் புனிதத் தொழிலின் பெயரால் அவளை அறிந்து கொன்றேன். அதற்குக் காரணமாய பேயே! என் மனமே! படு, நன்றாகப் படு!

தருமமும் கடமையும் விவாதிக்கும் ஒரு அருமையான கட்டம், கம்பனிலிருந்து எடுத்து நாடக ரூபமாகத் தரப்படுகிறது.

# அண்ணனும் தம்பியும்

ரகுநாதன்



**போ**ர்க்களம். குலத்து மானந் தீர்ந்திலனான கும்பகர்ணன் மலைபோல நிற்கிறான். இராமனது பக்கத்தினின்று தன்னந் தனியாக வந்த விபீஷணன், 'மழையின் நீர் வழங்கு கண்ணனாய்' அண்ணன் எதிரில் நிற்கிறான். தருமத்தின் உயர்வை எடுத்துக் காட்டி, அண்ணனைத் தன் பக்கம் திருப்பி, இராமனிடம் அடைக்கலம் புகச் சொல்லுகிறான். இருவர் கண்களிலும் ஒரு சிறு கலவரம்.

தூரத்தில் எங்கேயோ சங்கும், எக்காளமும், முரசறையும் ஏங்கி முழங்குகின்றன.

கும்பகர்ணன்:—(ஆச்சர்யத்துடன்) என்ன......?

விபீஷணன்:—(குலையாத ஸாந்தத்துடன்) ஆமாம். இராமன் எனக்குத் தரும் இந்த லங்கா சாம்ராஜ்யம் முழுவதையும் உனக்கே தந்துவிடுகிறேன். உனது காலடியிற் கிடந்து நீ இடும் கட்டளை நிறைவேற்றவும் தயாராயிருக்கிறேன். ஐயோ! அண்ணா...!

எனக் கவன் தந்த செல்வத் திலங்கையும் அரசு மெல்லாம்
நினக்கு நான் தருவென்; தந்து உன் ஏவலின் எளிதி னிற்பன்
உனக்கு இதில் உறுதியில்லை, உத்தம உன்பின் வந்தேன்
மனக்கு நோய் துடைத்து, வந்த மரபையும் விளக்கு வாழி.

இந்தப் போர் வெள்ளத்தினின்று நீ கரையேறுவதென்னமோ உறுதியற்ற நினைப்பு! பிறந்த குலத்தையாவது தழைக்கச் செய். அண்ணா! அதர்மமே கோர உருவாகக் கொண்டு விளங்கும் இராவணனைப்போல் வீணாக மடிந் தலையாமல் பிழைக்கின்ற வழியைப் பின்பற்று. இராவணனை மறந்துவிடு. அவனை விட்டுப் பிரிந்து.........

கும்பகர்ணன்:—(தணிந்து) இராவணனை—(உரத்து) இராவணனை விட்டுப் பிரிவதா? தம்பி, அவன் நம்மோடு பிறந்த அண்ணனல்லவா?

விபீஷணன்:—அண்ணன் தான். அதற்காகத் தருமத்தை ஒதுக்கி வைத்துவிடலாமா? தருமத்துக்காக உழைக்கும்போது, அண்ணன் தம்பி உறவு முறையைப் பார்த்து முடியுமா? அண்ணா! இது, நான் சொல்லி நீ தெரிய வேண்டியதில்லையே.

கும்பகர்ணன்:—அண்ணனை விட்டுப் பிரிவது, பழி யல்லவா?

விபீஷணன்:—(இள நகையுடன்) பழியா?......நல்லது. சன்மார்க்க நெறியினில் நடக்கின்றவர்களைப் பழி யென்ன கவ்வி விழுங்கி விடுமா? அண்ணா, உடம்பில்வெடிக்கும் பொக் கிளத்தை அழகு பார்த்து மகிழ்வா ருண்டா? அதை அறுத்துச் சுட்டு, மருந்து வைத்துக் கட்டி ஆற்றுவதல்லவா நல்ல வழி?

உடலிடைத் தோன்றிற் றொன்றை யறுத்து, அதனுதிர முற்றிச்
சுடருறச் சுட்டு, வேறோர் மருந்தினால் துயரந் தீர்வர்;
கடலிடைக் கோட்டம் தேய்த்துக் கழிவது கரும மென்றால்
மடலுடை அலங்கல் மார்ப! மதியுடை யவர்க்கு மன்றே!

கும்பகர்ணன்:—(கசந்த நகையுடன்) நீ சொல்லுவதைப் பார்த்தால், அண்ணனை நாமே தீர்த்துவிட வேண்டும் என்று சொல்வாய் போலிருக்கிறதே?

விபீஷணன்:—ஊஹூம். அப்படியெல்லாம் ஒன்று மில்லை. கூடுமானால், உனது அண்ணனையும் காப்பாற்ற வேண்டியது தான். ஆனால்—அது ஆகிற காரியமா? நீயுந் தான் இவ்வளவு நாளும் தோப்புக்கரணம் போட்டுப் பார்த்தாயே, முடிந்ததா? உனது போதனை யெல்லாம் இராவணனது காதில் கொஞ்சமேனும் ஏறியதா? இராவணனைக் காக்காவிடினும், தருமத்தையாவது நிலை நிறுத்தலா மென்றால், அதுவும் (பெருமூச்சுடன்) முடிகிற வழியில்லையே!

கும்பகர்ணன்:—(பரிதாப ஒலியில்) தருமம்...? இராவணனது ஏகாதிபத்திய நாட்டில் தருமமா? என்று, சீதையைச் சிறையெடுத்து வந்தானோ, அன்றே தரும தேவதையும் இலங்கையை விட்டுப் பறந்தோடி விட்டாளே? இனிமேல்......கொஞ்சங் கூட, மனமாற்ற மில்லாத இராவணனது ஆட்சியில் தருமம் நிலைக்கவா?

விபீஷணன்:—ஏன் நிலைக்காது? நிலைப்பதும், நிலைக்காததும் நமது இஷ்டத்தைப் பொறுத்தது. அண்ணா! இவ்வளவு நாளும் மலைபோலத் தூங்கிக் கிடந்தாயே, அதனால் உனக்கு ஏதேனும் பயன் உண்டா? ஏன் இப்போதும், உனது உயிரை வீணாக இழக்கப் போகிறாய்? தருமத்தை எதிர்த்து, அதைக் கெடுக்க இராவணனுடன் சேர்ந்து உழைக்கவேண்டு மென்பது தானே?

கும்பகர்ணன்:—தம்பி! தருமத்தைக் குலைப்பது எனது தொழில் என்று நினைத்துக் கொண்டாயா? தருமத்தைவிட மானம் பெரிய தல்லவா?......நான் தூங்கி யெழும் காலத்தி லெல்லாம் எனக்கு வேண்டிய மது மாமிச ஆகாரங்களை யூட்டி வளர்த்தவனல்லவா இராவணன்? என்னை நம்பிப் போர்க் களத்துக்கு அனுப்பிய இராவணனுக்குத் துரோகம் நினைப்பதா? உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைப்பதுதான் தரும சாஸ்திரமா?

தன்னை நம்பினவனைக் கைவிட்டும் தரும் என்றுதான் உனது தர்மம் சொல்லுகிறதா? தம்பி! இராவணனை விட்டுப் பிரிந்து வாழ்வது என்ன சாஸ்வதமான வாழ்வா? அவனை விட்டுப் பிரியும் வாழ்க்கை நீரின் மேல் வரையும் கோலந் தானே!

விபீஷணன்:—அண்ணா, என் தருமத்தின் உயர்ந்த இலக்ஷியத்தை......

கும்பகர்ணன்:—தம்பி விபீஷணா! உனது தரும லக்ஷியம் உயர்ந்ததுதான். ஆனால், எனக்கு நம்பிக்கை, மானம் இவை தான் உயர்ந்தவை. உனது உயரிய லக்ஷிய சித்திக்காக, நீ தரும பிரானை இராமனுடன் சேர்வது தக்கதுதான்......ஆனால்—பாப கிருத்யங்களையே மூட்டையாகச் சுமந்து கொண்டிருக்கும் எனக்கு வீரமரணத்தை விட, வேறு என்ன புகழ் இருக்கின்றது?

விபீஷணன்:—அண்ணா? அப்படி யென்றால், நீ சாகத் துணிந்து விட்டாயா?

கும்பகர்ணன்:—ஆம், சாவது என்னமோர் சரதம். அதைத் தான் இந்தப் போரில் உபயோகித்தாலென்ன? சாவது தான் எனக்குப் பெருமை. அதுதான் எனக்குக் கொடுத்து வைத்தது. அன்னியன் ஒருவன் எனது நாட்டுத் தலைவாசலில் நின்று கொண்டு, என்னை எதிர்க்கத் துணிந்தால், நானும் அவனை எதிர்க்கத் தயார்தான். நாட்டின் சேவையில்—லக்ஷியத்தின் சேவையில் என் உயிர் போனாலும் போகட்டும். திரிலோகங்களுக்கும் சர்வாதிகாரியாக விளங்கும் என் அண்ணன், கடைசியில் தம்பி ஒருவனும் துணையில்லாது மண்ணைக் கவ்வி மடிவானா? ஒரு காலத்தில் எமனையே ஆட்டிவைத்த என் அண்ணன்—அதே அண்ணன் அதே எமதர்மனின் சபையில், கால பாசத்தால் கட்டப் பட்டுக், கவிழ்ந்த தலையோடு செல்லும்போது, நானாவது அவனுக்குத் துணையிருக்க வேண்டாமா?

தும்பியந் தொடையல் வீரன் சுடுகணை துரப்பச் சுற்றும்
வெம்புவெஞ் சேனை யோடும், வேறுள கிளைஞ ரோடும்,
உம்பரும் பிறரும் போற்ற, ஒருவன் மூவுலகை யாண்டு
தம்பியரின்றி மாண்டு கிடப்பனோ, தமையன் மண்மேல்?

விபீஷணன்:—அண்ணா?...அப்படியானால், நீ இராவணன் பக்கம் சேர்ந்து...

கும்பகர்ணன்:—தம்பி! வேறு என்ன வழி இருக்கின்றது? நான் இராவணன் பக்கம் சேர்ந்து போரிடாமல், உனது பேச்சைக் கேட்டு, இராமன் பக்கத்திலே சேர்ந்தாலும் எனது கதி என்ன? என் அண்ணனைக் கொன்று பழிதீர்த்த, இரத்தக்கறை படிந்த பகைவனை வாயாரப் புகழ்ந்துதானே நான் அரியணை ஏற வேண்டும். கேவலம், இரு மானிடப் பிறவிகளையும் கூன் விழுந்த குரங்குக் கூட்டத்தையும் வணங்கி வாழ்வதைவிடச் சாவது மிகவும் மேலானது! இலங்கா புரியில் அடிமையாய்ச் சிம்மாசனம்

ஏறுவதைவிட், நரக லோகத்தில் சுயேச்சையுடைய தோட்டியாக வாழ்வது மிகமிக மேலானது.

விபீஷணன்:—என்ன அண்ணா...அப்படி யெனில் என்னுடைய பேச்சை நீ...

கும்பகர்ணன்:—நானா? உன்னுடைய பேச்சையா? தம்பி! அம்புபட்டு நெஞ்சு வகிர்ந்த புண்ணை எப்படியேனும் ஆற்றிவிடலாம். ஆனால், எனது தமையனைக் கொன்ற பகைவனை வாழ்த்தித், தலை வணங்கும்போது என் நெஞ்சினைக் கீறும் அம்புகளின் விஷப் புண்களை எப்படி ஆற்ற முடியும்? உனது இராக்வனது பாணத்தால் ஏற்படும் புண்களென்ன இவைகளைவிடப் பெரியதா? தம்பி! அப்படிப் பட்ட நெஞ்சுப் புண்களோடு நான் வாழ மாட்டேன்.

செம்பிட்டுச் செய்த இஞ்சித் திருநகர்ச் செல்வந் தேறி,
வம்பிட்ட தெரியல் எம்முன் உயிர்கொண்ட பகையை வாழ்த்தி
அம்பிட்டுத் துன்னங் கொண்ட புண்ணுடை நெஞ்சோடு,: ஐய!
கும்பிட்டு வாழ்கிலேன்யான் கூற்றையும் ஆடல் கொண்டேன்.

விபீஷணன்:—அப்படியானால், உனது கடைசி முடிவு...இராவணனுடன் சேர்ந்து போர் புரிவதுதானே!

கும்பகர்ணன்:—எனது முடிவு அதுதான். அதுதான் எனக்கும் முடிவைத் தரப்போகிறது. இந்தப் போர்க்களத்தில், என் கண்ணெதிர்ப்படும் எதிரிகளை உயிர் சுமந்து திரியவிடமாட்டேன். ஆலகால விஷத்தைக் கண்டு, அஞ்சியோடிய தேவர்கள் போல, எனது பகைவர்களும் என்னைக் கண்டு ஓட்டும். இந்தப் போர்க்களந்தான் எனது விளையாட்டு ஸ்தலம். இதில் பம்பரமாகச் சுழன்று, ஒவ்வொரு பகைவனையும் வெட்டி வீழ்த்துவேன். இந்த உயிர் உடலில் இருக்கும் வரை, கும்பகர்ணன் தலை வணங்கும் காலம் ஒருக்காலும் வராது. நான் யுத்தத்தில் இறந்து போவேன். இராவணனும் அப்படியே. அரக்கர் குலத்துக்கே இதுதான் ஊழி வெள்ளம். அவ் வெள்ளத்தினின்று கரை யேறுவது நீ மட்டுந்தான். அரக்கர் குலத்துப், பிதிர்க் கடனைச் செய்ய நீயாவது மிஞ்சினாயே!

விபீஷணன்:—அண்ணா...?

கும்பகர்ணன்:—என்னை அண்ணா என்று...வேண்டாம். நீ இராமனுடன் சேர்ந்த அன்றைக்கே எனது உடன் பிறப்பு செ—த்—து விட்டது!

விபீஷணன்:—(பயத்துடன்) என்ன?

கும்பகர்ணன்:—ஆமாம். இராமன் தருகின்ற இந்த இலங்கா சாம்ராஜ்யத்தை நீயே ஆண்டு கொள்!

விபீஷணன்:—அண்ணா!

(தூரத்தில் எங்கேயோ, போர் முரசமும், சங்கநாதமும் ஏங்கி மடிகின்றன.)

இது ஒரு காதல் யுகம். "காதல்" என்ற சொல் பேச்சிலும் எழுத்திலும் நன்றாக அடிபடுகிறது. இந்த நிலையில் ஆசிரியருக்குத் தூக்கம் வருவது கூடக் காதலாகி விட்டது!

# தேவ மகி ★

எஸ். பி. மாதையன்



அழகி; அவளுக்கு நான் தேவ மகி என்று பெயர் வைத்தேன். ஒரு நாள் இரவு, சில விநாடிகள் தான் நான் அவளைப் பார்க்க முடிந்தது. அந்தச் சொற்ப காலத்தில் அவள் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டாள். அதன் பிறகு பல இரவுகள் கடந்தன. அவளை நான் காணவில்லை. என் முயற்சிகளெல்லாம் வீணாயின. அவள் இருப்பிடமும் எனக்குத் தெரியாது. தெரியத்தான் வழியேது? அவள் தான் என் கனவுப் பெண்ணாயிற்றே!



நிலவு என்னைத் தழுவிற்று. உள்ளம் இன்ப எண்ணங்களில் சுழன்றது. வானத்தில் பவனி வந்து கொண்டிருந்த சந்திரனைப் பார்த்தேன். என் உள்ளம் நெகிழ்ந்தது....ஆம். என் தேவ மகியை அந்த வட்ட நிலாவிலே கண்டேன். அவள் வாய் அசைந்தது. வார்த்தைகள் எனக்குத் தெளிவாகக் கேட்டன.

"ஏ மானிடா! என்னை ஏன் உற்று உற்றுப் பார்க்கிறாய்? நீ என்னை நினைத்து ஏங்கினால் உன் உள்ளம் தான் புண்ணாகும். உன் எண்ணம் நிறைவேறாது. இந்த உலகிலுள்ள சகல ஜீவராசிகளுக்கும் இன்பத்தை அளிக்கக் கடமைப் பட்டவள் நான். தனிப்பட்ட ஒருவனுக்குத் தனிப்பட்ட முறையில் இன்பமளிப்ப தென்பது என்னால் சாத்தியப் படாது. ஆகவே ஆசைக்கு அடிமையாகாதே."

உருவம் மறைந்தது. என் உள்ளமும் அர்த்த மற்ற ஒரு சோகத்தில் மூழ்கிற்று.



படுக்கையில் புரண்டு கொண்டிருந்தேன். படுக்கை எனக்கு முட்புதரா யிருந்தது. தூக்கம் என்னை ஆகர்ஷிக்கவில்லை. எண்ணங்கள் சிதறி எங்கெல்லாமோ தெறித்தது. என் தேவ மகி........?

சந்திரிகையின் குளிர்ந்த கரங்களென நிலவு, ஜன்னல் வழியாக வந்து என்னைத் தழுவிற்று. என் மனம் இன்பத்தில் [illegible]. பார்வையை ஜன்னல் வழியாகச் செலுத்தினேன். சற்றுத் தூரத்திலிருந்த ஒரு மொட்டை மாடி வீடு என் பார்வையில் பட்டது. அதில் நான் ஒரு விசேஷத்தையும் காணவில்லை. அதற்கும் அப்பால்........ஒரு சிறு மலைக்குன்று உச்சியில் பத்து அடி அகல நீளத்தி

துள்ள ஒரு கற்பாறை. நிலவில் அது தங்கப் பாளத்தைப் போல் மின்னிக் கொண்டிருந்தது. அதன்மேல் ஒரு மங்கை! என் பார்வை அவளிடம் லயித்து விட்டது. என் உடலில் ஒரு துடிப்பு. அது என் உயிரைக் கவ்விப் பயமுறுத்திற்று. ஆழ்ந்த யோசனை யுடன் நடை பழகிக் கொண்டிருந்த அவள் ஏதோ தீர்மானத்துடன் என் வீட்டை நோக்கித் திரும்பினாள்.

'குப்'பென்று எனக்கு வியர்த்து விட்டது. மூச்சுக்கூட நடுங் கிக்கொண்டு வெளி வந்தது. ஆம். அவளே தான்! தேவ மகி!.... என் அறைக்குள்; அதுவும் என் அருகில் நின்றிருந்தாள்!

அவள் மிருதுவான கரம் என் நெற்றியைத் தடவிற்று. "நண்பா!" என்றாள். ஆஹா! அதில் தான் என்ன கனிவு! என்ன வாத்சல்யம்! அவள் சொன்னாள்:

"நான் உன்னை அணைக்க ஆவலுடன் ஓடி வருகிறேன். ஆனால் நீ விலகிப் போகிறாய். என் அணைப்பின் மூலம் இந்த உலகம் அடையும் இன்பத்தின் நியதிப்படிதான் நீயும் அடைவாய். அதிக ஆசைப் பட்டு வீணாக மனதைப் புண்படுத்திக் கொள்வதால் என்ன பயன்?"

என்னை அன்புடன் பார்த்தாள். அந்தப் பார்வை என் உள் ளத்தை ஊடுருவிச் சென்றது. "தேவ மகி! நான் உன்னை விரும்பு கிறேன். இதே நிலையில், இந்த அழகிய நீல உடையுடன் என்னை வருத்தாதே."

அவள் வாத்சல்யத்துடன் என் கன்னத்தைத் தடவிச் சொன் னாள் "அன்பா! உன் மனவேதனையின் காரணமாகத்தான் நான் இந்த உருவில் தோன்றினேன். நான் அரூபி. இந்த நீல நிற உடையும் எனக்கு உரியதல்ல. என் நீண்ட அங்கி கருப்பு நிற முடையது. அந்த உடையில் நான் தோன்றினால் நீ என்னைக் காணமாட்டாய்........"

"ஐயோ, தேவ மகி! நீ அரூபியா!...அப்படியானால்.....நீ...?"

"அன்பா! நான் தான் துயிலரசி. ஆம். நித்திரா தேவி. என் அணைப்பில் சகல ஜீவராசிகளும் மெய்மறக்கின்றன. ஆனால் நீ மட்டும்..................."

அவள் மறைந்தாள். ஒரு கணம் என் உள்ளம் புரண்டு விழுந் தது. ஜன்னலின் வழியாக வந்து கொண்டிருந்த வெண்ணிலவு மங்கி விட்டது. மெதுவாக இருள் என் அறைக்குள் பரவிற்று. கண்ணிமைகள் சோர்ந்தன. மனம் ஏதோ ஒரு அபூர்வ இன்பத்தில் மூழ்கிக் கொண்டிருந்தது. அந்த இன்பம் என் உடம்பில் சிறுகச் சிறுகப் பரவிக்கொண்டு வந்தது. ஆம். துயிலரசியின் அணைப்பில் நான் மெய் மறந்தேன்.

# ஊழும் இலட்சியமும்

வித்வான்—எம். சாம்பசிவம்



ஊழ்! ஊழைப் பற்றிப் பேசுவதும், எழுதுவதும் பார்க்கப் போனால், ஊழ் தான்! ஊழ் தானா, மனித இலட்சியம்? பின் அதைப்பற்றி மண்டையை உடைத்துக்கொண்டு ஆராய்ந்து மடிவானேன்?

"ஊழையும் உப்பக்கம் காண்பர், உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்."

நமக்கு இலட்சியம், ஊழல்ல; இடைவிடா முயற்சியே; தன் மதிப்பும் பிறர் நலனுமே! இதற்கு இளங்கோவடிகளும், விலக்கு அல்லர்.

ஒரு சமயத்தில் நான், ஒரு சபையில் இலட்சியத்தைப் பற்றிக் குறிப்பிட நேர்ந்தது? அந்த அவைக்கு இலட்சியம், அலட்சியமா யிருந்தது. 'உன் இலட்சியம் என்ன?' என்று கேட்பது போல் அந்த அவை நெளிந்து கொடுத்தது; என் இலட்சியத்தைக் கூறினேன்; ஏமாற்றம் அடைந்தது சபை.

இலட்சிய மென்றால், இமயமலையைப் பொன்னாக்கிக் கொண்டு வந்து, அதன் தலைமேல்—இல்லை—அதன் முன் வைப்பதுதான் என்று எதிர்பார்த்தது போலும், அந்தச் சபை!

உதாரணமாக—பெருஞ் சோலை யொன்றி னிடையே அழகொளிரும் மாளிகை யொன்றைக் கட்டி முடிக்க ஒருவன் க்ருதி முயல்கிறான்; அது முடியுமளவும் அதுதான், அவன் இலட்சியம். ஆனால், அடிப் படையைப் பலப்படுத்தி, முழுச் சுவர் எழுந்துவிட்ட பிற்பாடு அச் சோலையிலுள்ள குரங்குகள் அன்றாடம் எழும் சுவரைச் சரித்துத் தள்ளுவதாக வைத்துக் கொள்வோம். அப்பொழுது அவன் இலட்சியம் ஏது? மாளிகை கட்டுவதா? சுவரை எழுப்புவதா? மாளிகைக்குச் சுவரானது இன்றியமையாத தாகுவதால், அவன் இலட்சியம், தற்காலிகமாகச் சுவரை எழுப்புவதாகின்றது; அதனால், அவன் இலட்சியம் தவறியது என்பது எப்படி?

"உள்ளுவ தெல்லாம் உயர்வு உள்ளல்; மற்றது
தள்ளினும், தள்ளாமை நீர்த்து."

மாளிகையைக் கட்டி முடிப்பதற்குள் அவன், இறந்து விட்டாலும், அவன் இலட்சியம் பொய்த்த தாகாது.

"கான முயல் எய்த அம்பினில், யானை
பிழைத்த கோல் ஏந்தல் இனிது."

தன்னை ஒரு 'அறிவாளி' என்று ஒருவன் கூறிக் கொள்வதால் அவனுக்கு எவ்வளவு முட்டாள் பட்டம் கிடைக்குமோ, அதை

விட்ப் பன் மட்ங்கு புத்திசாலிப் பட்டம் கிடைக்கும், அவன், தன்னை ஒரு 'இலட்சியவாதி' என்று கூறிக் கொள்வானுனல். அதோடு ஓர் இலட்சியமும் இருப்பது சிறந்தது.

சிலப்பதிகாரத்திலே இளங்கோ வடிகளின் இலட்சியம், இன்னது என்று கூறிக் கொள்வதைக் காட்டிலும், இளங்கோவடிகளின் 'காலமும், இடனும், ஏற்ற கருவியும் தெரிந்து' அவரது இலட்சியம் எவ்வளவு தூரம் அப்பொழுதே நிறைவேறி இருக்கிறது! என்று பெருமை அடைவதே நம் கடமை—தமிழர் கடமை.

பொற்கொல்லன், பாண்டியன், மாதவி முதலியவர்கட்குத் தனித்தனி ஊழ் கற்பிக்கப்பட்டிருந்தால், சிலப்பதிகாரம் எத்தனையோ நூற்றுண்டுகட்கு முன்னமேயே அடுப் பெரிக்கப் பயன் பட்டுப் போயிருக்கும்; இளங்கோ வடிகளையும் 'விளையாட்டுப் பிள்ளை' யென்று உலகம் கூறிவிட் டிருந்திருக்கும். அப்படியொன்றும் நடந்துவிடவில்லை என்பதை அறிந்திருந்தாகிலும் எச்சரிக்கையாகவே, அன்பர், தம் மூளை வெளியிடாம லிருந்திருக்கலாம். என் செய்வது?————(கோடிட்ட இடத்திலே, 'எல்லாம் ஊழ் தான்!' என்று எழுதப் பொருந்தும். அப்படி எழுதிவிடுவதும் சுலபம்; ஆனால், அப்படி எழுதாமல் விடுவதில் தான் பொருள் இருக்கிறது. இது கருதிதான் அடிகள், 'ஊழ்' என்பதை எங்கும் சேர்க்க மறுத்தனரோ என முடிவு கூற நான், தயாரிலில்லை.)

'சிலம்பு+அதிகாரம்' என்பதைப் பொரு ளுணர்ச்சியோடு உச்சரித்துப் பார்த்திருந்தால், இந்த ஐயங்களெல்லாம் நிகழ்ந்திருக்கக் காரண மில்லையே! பதினைந்து, இருபது பக்கங்கள் எழுதி மறுக்க வேண்டிய செய்திகளையெல்லாம் இச் சொற்றெடுரொன்றே முன்னின்று தகர்த் தெறிகின்றதே! அதனாலேயே விரித்துப் பரப்பாமல், கச்க்கி முகராமல் விட நேர்கிறது. அதனால், மீண்டும் கூறுகிறேன். 'உச்சரிக்க! 'சிலப்பதிகாரம்.' 'சிலப்பதிகாரம்.'

"நெஞ்சை அள்ளும் (!) சிலப்பதிகாரம் (!!) என்று, ஓர் மணி ஆரம் (!!!) படைத்த தமிழ் நாடு (!!!!)" என்று, பாடியும் தெளிக. நிற்க.

சிலப்பதிகாரம், இளங்கோவடிகளின் இலட்சிய சிருஷ்டி! அதைக் குறுகிய ஒரு வரம்புக்கு உட்படுத்தி, ஒரே கோணத்தில் பார்ப்பது மாபாதகம். ஒரேயடியாகச் சிலப்பதிகாரமே பொய் என்பது, முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைத்த குண்டோதரன் கதையாய் முடியும் என்று எச்சரிக்கை செய்ய வேண்டி யிருக்கிறது.

சிலப்பதிகாரத்தின் சிறப்பியல்புகளை யான் விவரிக்காததின் காரணம், பிரதிவாதக் கட்டுரையாளர்கள் போதுமான அளவிற்கு விவரித்திருப்பதே யாகும்.

# ரேகை சாஸ்திரம்

G. B. L



(சென்ற இதழின் தொடர்ச்சி)

## கிரக ஸ்தானங்கள்

**ரவி** (சூரிய) ஸ்தானம்:—மோதிர விரலின் அடிப்பாகத்தில் அமைந்திருக்கும் இந்த இடம் உயர்ந்து (உப்பலாய்) இருந்தால், சூரியனின் ஆட்சி உடையவர்களாவார்கள். இவர்கள் மிகவும் அழகிய சரீரம் உடையவராகவும், இனிமையான குரலுடையவராகவும், தம் புன்சிரிப்பால் மற்றவர்களைத் தம் வசப்படுத்திக் கொள்ளும் ஆற்றலுள்ளவராகவும், ஆடை ஆபரணங்களில் அதிக ஆசை யுடையவராகவும், அழகிய வஸ்துக்களின் மேல் பிரியமுடையவராகவும், மிகுந்த இரக்க முடையவராகவும், சத்தியவந்தராகவும், சாந்த குணம் படைத்தவராகவும், மித போஜனம் செய்பவராகவும், காரமான ஆகாரத்தையும், சுண்டைக்காய் பாகற்காய் முதலிய கசப்புக் காய் கறிகளை உபயோகிப்பவராகவும், தங்களுடைய சாமர்த்தியத்தில் மிகவும் நம்பிக்கை உடையவராகவும், எடுத்த காரியத்தை எவ்விதத்திலாவது முடித்து ஜயமடையக்கூடியவராகவும், தனவந்தராகவும், செல்வாக்குப் படைத்தவராகவும், கௌரவ மடையக் கூடியவராகவும், சூக்ஷ்மபுத்தி உடையவராகவும், வாணியின் பூரண அருள் அடைந்தவராகவும், சுதந்திர மனப்பான்மை உடையவராகவும், நியாயமான வழியில் தைரியத்துடன் நடக்கக் கூடியவராகவும், தங்கள் மனதில் தோன்றியதை உடனே எல்லோருக்கும் தெரிவிப்பவராகவும், முன்னேற்றத்திற்காக நூதன வழிகளைக் கண்டு பிடிப்பவராகவும், லோக சஞ்சாரம் செய்பவராகவும், மதப்பற்றுடையவராகவும், ஜோதிடத்தில் முழு நம்பிக்கையுடையவராகவும், மலை, அருவி, தோட்டம் முதலிய இடங்களிலுள்ள இயற்கைக் காக்ஷிகளைக்கண்டு களிப்பவராகவும், பித்ரு பக்தி உடையவராகவும், மூக்குக் (கண்) கண்ணாடியை உபயோகிப்பவராகவும் இருப்பார்கள். மேலும் சூரிய மகாதசையில் சூரியன் பிரகாசிப்பதைப்போல் இவர்கள் எல்லா விதங்களிலும் பிரகாசித்துக் கொண்டிருப்பார்கள் (சூரிய ஸ்தானத்திலுள்ள ரேகைகளின் பலன்களைக் குறித்துப் பிறகு ஆராய்வோம்.)

சந்திர ஸ்தானம்:—மணிக்கட்டின் மேற்பாகமாகிய, சிறிய விரலின் கீழே அமைந்திருக்கும் பாகம் சந்திர ஸ்தானம். (படத்தில் சந்திர ஸ்தானத்தைப் பார்க்கவும்) இந்த இடம் உயர்ந்து உப்புலாய்க் காணப்பட்டால் சந்திரனின் ஆட்சி உடையவர்க

ளாவார்கள். இவர்கள் ஞான மார்க்கத்தில் இச்சை யுடையவ ராகவும், யோசனை சக்தி யுடையவராகவும், எந்த வேலையை யாகி லும் தீவிரமாய் யோசனை செய்தபிறகே காரியம் தொடங்குபவராக வும், பாலையும், பழங்களையும், உப்புக்கலந்த ஆகாரத்தையும் அதிகம் புசிப்பவராகவும், சந்தன, புஷ்பங்களை விரும்புபவராகவும், பட்டுத் துணிகளைத் தரிப்பவராகவும், பயந்த சுபாவ முடையவராகவும், அதிகப் பிரயாணம் செய்ய ஆசை யுடையவராகவும், மாத்ரு வாக் கிய பரிபாலனம் செய்பவராகவும், காளி பூஜை செய்பவராகவும், கற்பனைசக்தி அதிகம் வாய்ந்தவராகவும், மதுரமாய் வார்த்தை யாடுபவராகவும், தூரதிருஷ்டி வாய்ந்தவராகவும், திடசித்த மில்லா




1. ரவி ஸ்தானம்.
2. சந்திர ஸ்தானம்.
3. குஜ (செவ்வாய்) ஸ்தானம்.
4. புத ஸ்தானம்.
5. குரு ஸ்தானம்.
6. சுக்கிர ஸ்தானம்.
7. சனி ஸ்தானம்.

தவராகவும், மனோரதப் பிரயாணம் செய்வதால் சோம்பேறியாக வும், ஏகாந்தத்தை விரும்புபவராகவும், எண்ணாத எண்ணங்களை எல்லாம் எண்ணி, எட்டாத கோட்டைகளைக் கட்டுபவராகவும், பகற் கனவு காண்பவராகவும், கூர்ந்தபுத்தி உடையவராகவும், குதர்க்கம் பேசுபவராகவும், வாயாடியாகவும், பொய் பேசுபவராகவும், பேராசை யுடையவராகவும், மனோசாந்திக்காகப் புதிய, புதிய, இடங் களைத் தேடுபவராகவும், கல்வி அதிகம் கற்காமலே, எல்லாம் கற்ற வரைப்போல் நடிப்பவராகவும் இருப்பார்கள். மேலும், சூரியனின் உதவியால் சந்திரன் பிரகாசிப்பதைப் போல், இவர்கள் சூரிய ஆட்சி உடையவர்களின் உதவியால் சந்திர மகா தசையில் பிரசித்தி அடைவார்கள் (சந்திர மேட்டிலுள்ள ரேகைகளைக் குறித்தும், பலன்களைக் குறித்தும், பிறகு ஆராய்வோம்.)

# விஞ்ஞானம் அடிமைப்படல்

டி. பி. நவநீதகிருஷ்ணன் எம். ஏ.



அடிமையியல் முறையை அடிப்படியாய்க் கொண்ட சமூக் வாழ்க்கை முறை யேற்பட்ட பின், புதுமைகள் கண்டு பிடித்தல் அரிதாயிற்று. ஆனல், சிலர் பெருஞ் செல் வர்களாயினர். கி. மு. 2600ம் ஆண்டினின்று கி. மு. 600ம் ஆண் டின் வரையான இடைப் பகுதியில், மூன்று புதுமைகளே கண்டு பிடிக்கப்பட்டன. அவை, கி. மு. 1400-ம் ஆண்டில், கற்களைக் காய்ச்சி இரும்பு கண்டு பிடிக்கப்பட்டது, கி. மு. 1300-ம் ஆண் டில், நெடுங்கணக்கு (ஆல்பபெட்) வகையான எழுத்து முறை காண்டல், கி. மு. 700-ஆண்டில், நகரத்திற்கான நீரை, வாய்க் கால்கள், பெருங் குழாய்கள் வழியே கொண்டு வரும் 'நீர்க் கலிங்கு' முறை, (அல்லது ஜலதாரை முறை) என்பவையேயாம். இவற் றில் இரண்டு மட்டுமே, நகரங்களில் கண்டு பிடிக்கப்பட்டவை. இரும்பை உலோகக் கற்களினின்று காய்ச்சி யெடுக்கும் வகை, 'ஹிட்டைட்' என்ற அநாகரிக மக்களால் கண்டு பிடிக்கப்பட்டது. இதற்கு முன்னை காலங்களில் கண்டு பிடிக்கப் பட்டவற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, பெரும் வகையினவாய்க் காணப்பட வில்லை. இரும்பு கண்டு பிடிக்கப்பட்டதால், கி. மு. 2000-ம் ஆண் டிற்கு பிற்பட்ட காலம், உலோக காலத்தின் பிற்பகுதியான இரும்புக்காலம் எனப்படுகின்றது.

இரும்பு கண்டு பிடிக்கப்பட்டபின் அதைக் கொண்டு செம்பை விடவும் வெண்கலத்தை விடவும் உறுதியானவையும், நீடித்துத் தரிக்கும் வகையினவுமான கருவிகளைச் செய்ய இயன் றது. மேலும், இரும்பு அதிகமாய்க் கிடைத்ததால், அவ்வாயு தங்களை மலிவாயும் செய்ய இயன்றது. அவ்வாறு கிடைத்த, பெருவாரியானவும் உறுதியானவுமான இரும்புக் கருவிகளைக் கொண்டு, மித சீதோஷ்ண நிலைமை பெற்ற இடங்களிலிருந்த காடுகளை வெட்டி யழித்ததால், மக்கள் வாழ்தற்கேற்ற வண்ண மான நாடாய் அவ்விடங்கள் திருந்தின. அந்நாட்டிலும் மக்கள் குடியேறினர். அந் நாடுகளிலும் நகரங்கள் எழுந்து வளர்ந்தன. நாளடைவில், அந் நாடுகளே நாகரிகத்தின் நடுநாயகங்களாயின. இன்றும் அவையே நாகரிகத்திற் சிறந்த நாடுகளாயுள்ளன.

சிலர், பெருநிதி திரட்டிச் செல்வர்களானதும், தொழிற் கலைகளின் சிறப்புத் தாழ்ந்ததும், அடிமை முறையின் எழுச்சியும், புதுமைகள் கண்டு பிடித்தலின் சிதைவும், ஒரே காலப்பகுதியில் ஏற்பட்டன. இதற்குச் சிறிது முன்னரான காலத்திலேயே எழுத்துக் கண்டு பிடிக்கப்பட்டது. புதுமைகள் கண்டு பிடித்தல் குறைவுற்றது என்பதை மறைத்துக் காட்டும் வகையில் எழுத்துப்

பயன்பட்டது. எழுத்து முறை கண்டு பிடிக்கப் படுதற்கு முன்னை காலங்களில், எழுந்து வளர்ச்சியுற்ற பல சிறந்த புதுமைகளைப் பற்றிச் சுருக்கமான வகையில் எழுத்தாளர் குறிப்பிட்டனர். அதற்குப்பின் ஏற்பட்ட சில புதுமைகளைப் பற்றி மிகவும் விரிவாய் எழுதி வைத்தனர். இதனின்று, எழுத்திற்கு முன்னை காலத்தில் எழுந்த புதுமைகள் சிலவே யென்றும், பின் ஏற்பட்டவை பலவானவை யென்றுமான கருத்து எழ இடமாகின்றது. இவ்வகையில் எழுத்து எழுந்தவுடனேயே ஏமாற்றுதற்குப் பயன்பட்டது. எண்ணும் எழுத்தும், அவை கண்டு பிடிக்கப்பட்ட சிறிது காலத்திற்குள்ளாகவே, அறிவு வளர்ச்சியைத் தடைப்படுத்தும் வகையில் பயன்படலாயின. இதற்குக் காரணம், எழுத்தாளர் ஆட்சியாளருடன் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதுவே. இவ்வகைத் தொடர்பால், அவர்கள் தொழிற்பாற்பட்ட அறிவை இகழத் தொடங்கினர். உயிர்நூல்-இயைபுநூல்-பூதநூல்-இன்னோரன்னவற்றின் பாற்பட்ட அறிவு, தொழிற்கலையியல்களையே அடிப்படையாய்க் கொண்டவை. அவ்வாறான கீழ்த்தரமான தொழில்கள் பாற்பட்ட அறிவு, மேன்மக்கள் வித்தையான எழுத்தால், குறித்து வைத்தற்குத் தகுதியானதன்று, என எண்ணப்பட்டுக், குறித்துவைக்கப்பட வில்லை. ஆனால், பெருநிதி ஈட்டற்கான வாணிகத்திலும், அரண்மனை-கோயில்-இவற்றின் பாற்பட்ட கணக்குகளை எழுதுவதற்கும், எண்ணும் எழுத்தும் பயன்படுதல், நன்றெனக் கருதப்பட்டது. இதனால், எல்லா மக்களுக்கும் பயன்படக்கூடியதான அறிவு குறிக்கப்படப் பயன்படுத்தப்படாது, சிலர் சிறிது காலத்திற்குத், தன்னலவியலான வகையில் பெருமையும் வன்மையும் பெற்று உயர்வதற்கான வழிகளில் எழுத்துச் சென்றது. 'மந்திரமே உயர் நிலைமை யெய்திய மக்களுக்கு உரித்தானது; அது உள்ளவற்றைப் பற்றிக் கூறுது கற்பனையானவற்றைப் பற்றிக் கூறுவது; அகக்கண் மட்டுமே கொண்டு பார்ப்பது அறிவு; அவ்வறிவு உள்ளது கண்டவற்றின் பாற்பட்ட மெய்யைவிட மேலானது. என்வே மந்திரத்தை யெழுதவே, உயர்கலையான எழுத்து உபகரணமாக வேண்டும்' என்ற எண்ணங்களால் எழுத்தாளர் மயக்கப் பட்டனர்.

'எழுதுதல்' என்பது வினைச் செய்வகையான காரியத்திலொன்று. அது, செயற் பயிற்சியினின்றே விளைந்தது. அற்புதமான வியல்கள் பலவற்றைக் கொண்டுள்ள தெனினும், அதைக் கொண்டு செய்யவியன்ற பணிவகைகள், மற்ற செயற்கலைகளைக் கொண்டு செய்ய வியன்ற பணிவகைகளைப் போன்றே, ஒரு வரம்புக்குட்பட்டவை. எழுத்து முறை, இயற்கையின் பாற்பட்ட நிகழ்ச்சிகளைப் பற்றிச் செம்மையான வகையில் விவரித்தற்குப் போதுமான தன்று. மெய்யையும் எழுதலாம்; பொய்யையும் எழுதலாம். பொய்யைத் தன்னியல்பாகவே விலக்கிவிட்டு, மெய்யை மட்டும் எழுதும் புதுவகையான பொறித்தல் முறை, இனி யென்றாவ தொருநாள் கண்டு பிடிக்கப்படலாம். ஆனால், இப்பொழுதுள்ள எழுத்து முறை அவ்வியல்பினதன்று. அது,

சரியானவற்றைவிட்ப் பிழையானவற்றையே அதிகமாய்ப் பரப்பும் திறனுடனுள்ளது. ஏனெனில், உள்ளவற்றுடன் எவ்வகையான உறவும் கொண்டிராதவற்றைப் பற்றிக் கற்பனையினால் எழுந்த கருத்துக்களையும், சொற்களைக் கொண்டு எழுத இயலும். அவ்வாறு, மனத்தில் மட்டுமே எழுந்த எண்ணங்கள், எழுத்தால் பதிக்கப் படும்போது, அவை கண்ணால் காணவியன்ற உருவை யடைகின்றன. கட்புலனாகின்றவை யெல்லாம் உள்ளவையானமையின் உண்மையானவையே யென்ற மருட்சியியலான உண்மைத் தன்மையை அவ்வெண்ணங்கள் அடைகின்றன. இதனாலேயே, எழுதப்பட்டவை யாவும் மெய்யே என்று கொள்ளும் வழக்கம் எழுந்தது. 'அச்சிடுவதற்கான எழுத்துக்கள் உலோகத்தினாலாவது, மரத்தினாலாவது செய்யப் பட்டவை; எனவே, அவை திண்ணமாய் உள்ளவை; அவற்றினால் பதிப்பிட்ப் பட்டவை, இருத்தலைப்பற்றி ஐயமே யில்லை' என்ற எண்ணமே, அச்சேற்றப்பட்ட யாவும் உண்மையே என்ற நம்பிக்கை வழங்குதற்குக் காரணம்.

பேப்பரில் போட்டிருக்கின்றவையும், புத்தகத்தில் இருப்பவையும் பொய்யாயிருக்காது என்ற உறுதிக்குக் காரணமும், எழுத்தின் உண்மை போன்ற தோற்றமே.

முதன் முதலாய்த் தோன்றிய எழுத்தாளர், தமது கலையை முன்னிட்ட் மதிப்பினால் எழுந்த பெருமையைப் பெற்றனர். இதனால், எழுதப்பட்ட யாவும் முக்கியமும் மேன்மையும் ஆனவை யென்று ஏற்பட்டது. மேன்மையும் முக்கியமும் ஆனவை உண்மையும் ஆனவை என்ற எண்ணம் தொடர்ந்தது: எழுதுதல் என்பது ஏதாவதொன்றின் பாற்பட்ட அறிவையாவது, வினைச் செய்வகைகளைப் பற்றியாவது, கண்டதொன்றைப் பற்றிய விவரத்தையாவது, மனத்திலெழுந்த கருத்தையாவது, சொற்கள் வாயிலாய்க் குறித்துக் கொள்ளும் சாதனம் எழுத்து முறை. ஒரு சாதனமே யென்றதை எழுத்தாளர் மறந்து, தாம் எழுதியவற்றின் பாற்பட்ட அறிவை யெல்லாம் தாமே யுண்டாக்கினதாய்க் கொண்டனர்; எனவே, எழுதுதல், அறிவை யுண்டாக்கும் முறை யென்ற எண்ணத்தால் தம்மைத் தாமே மயக்கிக் கொண்டனர்; எழுத்தைக்கொண்டு வரையப்பட்டன வெல்லாம், உண்டென்றும், பொருளுடனுள்ள உண்மைகளென்றும், நிலைநாட்டினர். எண்ணும் எழுத்தும், இயற்கை நிகழ்ச்சிகளின் பாற்பட்ட விஷயங்களை மக்கள் புதிதாய் அறிந்து கொள்வதற்கு ஊற்றுக் கண்களாகிய கைவினைத் தொழின் முறைகளினின்று முற்றும் வேறுபட்ட வழிகளைப் பின்பற்றிய வகையில் பரிணமித்ததால், அவை, ஆக்க வியலான சிந்தனை யூட்டும் அறிவைப் பெருக்காது, மெய்யே போன்ற பாவனைச் சங்கதிகளாலான தீர்க்கதரிசன மந்திர முறையும், சோதிடமும் பெருமையுடன் விளங்குமாறு செய்தன. தீர்க்கதரிசன மந்திர முறையும், சோதிடமும், உண்மையான பலவற்றைப் பற்றி ஆராயாது, முற்றும் கற்பனை

யியலான சிந்தனையாலேயே, மேலும் மேலும் வளர்ச்சியடையும் இயலானவை. அவை, அறிவைக் கொண்டு மட்டும் வேறெவ் வகையான துணையும் ஆராய்ச்சியுமின்றி, மேலும் மேலும் அறிவைப் பெருக்கலாம் என்ற இச்சகமான பெருமையைப் பெற்றவை. தற்காலத்தில் ஏற்பட்டுள்ள ஒலிபரப்பு முறையைப் போன்றே எழுத்தும், முதலில், ஏமாற்றகரமாகவே யிருந்தது. அது, உண்மையான சிலவற்றுடன், பிழையான கருத்துக்கள் பலவற்றையும் பிரசாரம் செய்தது. ஒலிபரப்பு முறை, இக்காலத்தில் பல நாடுகளிலுமுள்ள பலவகையான சர்வாதிகாரிகளும், பொது மக்களைப் பிரகடனங்கள் செய்து, ஏமாற்றி ஆட்சி செய்வதற்கான வழிகளில் பெரிதும் துணை செய்கின்றதே யன்றி, உண்மையியலான அறிவைப் பெருக்கும் வண்ணம் ஒலிபரப்பவில்லை. அது போன்றே எண்ணும் எழுத்தும் அக்காலத்துச் சர்வாதிகாரிகள், மக்கள் மீது முழுமையான ஆட்சியைப் பெறுதற்கான வழிகளிலேயே, முதலில், துணை செய்தன. மற்ற தொழிற் கலைகளின் மேலான விளைவுகளைக் கைப்பற்றி, அவற்றின் பலனைத் தாமடைந்தது போலவே, எல்லாவகையான சம்பத்துக்களையும் தமதாக்கிக் கொள்ள வேண்டும், என்ற பேராசையால் தூண்டப்பட்ட மேன் மக்கள் (ஆட்சியாளர்களான அரசர்களும் குருமாரும்), எண்ணும் எழுத்தும் தமக்கு ஏவல் புரியுமாறு செய்தனர்.

கி. மு. 3500-ம் ஆண்டினின்று, கி. மு. 500-ம் ஆண்டு வரை நீடித்திருந்த காலத்தில், மெஸோபொடோமியோவிலும், எகிப்திலும், நகரவியல் முறையின் ஆட்சி வலுத்திருந்தது. அக்காலத்தே, எண்ணியல் நூல் (மாதமாடிக்ஸ்), மெஸோபொடோமியோவில், நிதி திரட்டுதற்கும், சோதிடம் கணிப்பதற்குமான வழிகளில் மட்டுமே உபயோகிக்கப் பட்டது. எகிப்து நாட்டில், எண்ணியல் நூல், இறந்த அரசரையும், அவரைச் சார்ந்தோரையும், மக்கள் மறவா திருத்தற் பொருட்டுக் கட்டப்பட்ட ஞாபகார்த்தமான ஸ்தூபிகளையும் கோரிகளையும் நிறுவுவதற்கான கட்டிட்வியல் கணக்குகளைச் செய்வதற்கே பயன்பட்டது. நீடித்திருந்த அக்காலப் பகுதியில், அறிவியலான விஷயங்கள் சிலவும் கண்டு பிடிக்கப் பட்டவே, கூட்டல்—கழித்தல்—பெருக்கல்—வகுத்தல் முறைகளும், அகலத்தையும் நீளத்தையும் பெருக்கிப் பரப்புக் கணக்கிடும் முறையும், வாய்ப்பாடு முறையும், இருகீழ் மடக்கை, முக்கீழ் மடக்கை (ஸ்குயர் ரூட், க்யூப் ரூட்) கணக்கிடும் முறையும், வட்டிக் கணக்கிடும் முறையும், கட்டிடங்களை அளவிடும் முறையும், நேரம் அளவிடும் வழிகளும், அக்காலப் பகுதியில் கண்டு பிடிக்கப் பட்டவை. எனவே, கணக்கிடும வகைகள், அரண்மனை, கோயில் இன்னோரன்னவற்றின் பாற்பட்ட கட்டிட் வேலைகளுக்கும், கோட்டைகள் கட்டுதல், போர் முறைகள், இன்னோரன்னவற்றின் பாற்பட்ட வேலைகளுக்கும், பயன்பட்டன, எனக் காண்கின்றோம். எண்ணியல் நூல், ஆக்கவழிகளுக்கும், அறிவியல் முறைகளுக்கும், பயன்பட வில்லை. ஆயிரம் ஆண்டுகள் கழிந்த பின்னரே, எண்ணியல் நூல், அறிவியல் நூலான, வான நூலின்

பார்ப்பட்ட வற்றைக் கணக்கிடுதற்குப் பயன்பட்டது. உலக சரித்திரம் தொடங்கிய காலத்தினின்று விஞ்ஞானமும் எண்ணியல் நூலும், சமூக அமைப்பில் மக்களிடை யேற்பட்ட வகுப்புவாரி முறையின் தன்மையுடன் தொடர்பு கொண்டிருந்த வழியே, வளர்ந்து வந்துள்ளன.

தொழிற் கலைகள் சிறப்பான நிலைமையைப் பெற்றிருந்த காலத்தில் விஞ்ஞானமும் செழிப்புற்றது. மக்களின் நல்வாழ்க்கையும் சிறப்புற்றது. தொழிற் கலைகளை அடிமை நிலைக்குத் தாழ்த்தப் பட்டபோது, விஞ்ஞானமும் தளர்வுற்றது. சிலர் செல்வராயினர். பலர் வாழ்க்கை நலங்கள் சிலவற்றையும் பெருதவ ராயினர். எனவே, மக்கள் நல் வாழ்க்கை சிறப்புறவேண்டுமாயின் தொழிற் கலைகள் உயர்ந்த நிலைமையைப் பெறவேண்டும் என்று ஏற்படுகின்றது. அவ்வகையான நிலைமை நிலைத்திருக்க வேண்டுமாயின், விஞ்ஞான வியலான ஆட்சிமுறை நிறுவப்பட வேண்டும். அதாவது, தொழின் முறைச் சிறப்பால் பெறப்பட்ட விளைவுகளை, எல்லா மக்களும் பெறும் வகையில் பகிர்ந்துதரும் வழிகளைக் கொண்டதும், பெருநிதி சிலரிடமே திரட்டப்படுதற்கு இடந் தராததுமான, ஆட்சி முறை, நிறுவப்பட வேண்டும். தொழிற் கலைகள் இயற்கை நிகழ்ச்சிகள் இன்னோரன்ன உள்ளன வற்றின் பார்ப்பட்ட அறிவே, ஆக்கவியலான அறிவு, என்ற விஞ்ஞான வியலான கருத்து எல்லா மக்கள் மனத்திலும் ஊன்றியபோதே, விஞ்ஞான வியலான ஆட்சி முறை வன்மை பெற்றுச் சிறப்புறும். எல்லா மக்களின் நல் வாழ்க்கை நனவாகும். விஞ்ஞானத்தின் தளைகள் தறிக்கப்பட்டு, அது அடிமை நிலைமையினின்று விடுபடும்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

சி. பி. ஆனந்தம்



## யுரேனஸின் செல்வாக்குகள்

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

ஆன்ம ஒளிக்கு முனைக்கூட்டும் உன்னத பலம் 'யுரேனஸ்' கிரகத்தின் இயலாகும். இவ் இயலில் ஏனைய கிரகங்கள் யாவினும் இது மிகவும் உயர்ந்தது. உலகில் தோன்றிய - தோன்றுகிற 'ஞானி' கள் பலரும் இதன் செல்வாக்குக்கு உட்பட்டவர்களாகவே பெரும்பாலும் இருப்பார்கள். அதாவது ஞானிகளுடைய 'விதிச் சக்கரம்' (Wheel of Destiny) யுரேனஸின் செல்வாக்குகளில் கட்டுப்படுத்தப்பட் டிருக்கும் - அல்லது சுழன்று வரும்படி இருக்கும். இத்தகையோர்களை 'யுரேனியன்ஸ்' என்கின்றனர் மேலைப் புலவர்கள்.

ஆம், எந்த ஸித்திகளும் சிரமமின்றி - துன்பங்களின்றி உண்டாவதில்லை. ஸித்திகளில் உயரியது-எல்லோருடைய உள்ளங்களையும் கவருவது ஆன்ம வளர்ச்சிக்கு உதவும் அறிவே. அந்த அறிவு உலகியலில் தொடர்ந்த தோல்விகளின் பாட்டையிலே பெறும் அனுபவங்களினால் தான் ஸித்திக்கக்கூடியதென்பது அதன் ஸித்தாந்தம். வாழ்க்கையில் நேரும் தோல்விகள் ஒவ்வொன்றும் வெற்றியின் இரகஸ்யத்தைக் கற்பிக்கும் படிப்பினைகள். அதை உணர்ந்து கொள்வதற்கு வேண்டிய அவசியத்தை-அல்லது நிர்ப்பந்தத்தையும், உத்வேகத்தையும் ஏற்படுத்திக் கொடுக்கின்றது யுரேனஸின் செல்வாக்கு.

இயற்கை அறிவு (Intuition) இது தாராளமாக வழங்கும் பெருந்தனம், இதன் பெருமையால் தான் 'யுரேனியன்ஸ்'—அதாவது யுரேனஸ் கிரகத்தின் செல்வாக்குக்குக் கட்டுப்பட்ட 'விதி' யுடையவர்கள் பெரும்பாலரும் உலகினரின் உயர்ந்த மதிப்பிற்கு உடையவர்களாகப் போற்றப் படுகின்றனர். மறை தத்துவ ஞானமும்-அதற்கு உதவும் நுண்ணறிவும் இதன் ஜீவ நாடி. இதனால் இதன் செல்வாக்கு, அதற் குட்பட்ட விதியுடையவரை, உலகியலறிந்த யோகியாக்குகிறது. அறிவதற் கரிய உலகியல் திறத்தும் சூழலின் இரகஸ்யங்களைப் படிப்படியாக உணர்த்துவது இதன் பொருமைகளில் முதன்மையானது.

இன்னும், இதன் செல்வாக்குகளில் புதியன காணுதல்-ஆராய்ச்சி நேர்மை-மறை பொருளில் பேசுவது-கட்டுக்கு அடங்காத கற்பனை-எவரையும் தன் வழி இணங்கி வரச் செய்யும் மோகன சக்தி-பளிங்கனைய மனநிலை-நூதனமான தனி நடை-பிறர் அறிய முடியாத வாழ்வின் மர்மங்கள்-காய ஸித்தி-கற்ப மார்க்கம்-நீண்ட ஆயுள் ஆகியன பலவும் வரும்.

இத்தகைய யுரேனஸ் பொதுவாக பாபக் கிரகமாகவே (Malific Planet) பெரும்பாலும் கருதப்படுகிறது. ஆனால், பெறுவதற்கரிய ஆன்ம ஸித்திக்கு வழி காட்டும் நல்ல செல்வாக்குகளில் இதனை இவ் உயர்ந்த நோக்கில் சுபக் கிரகமென்றே (Benefic Planet) வழங்கலாம்.

இவை யெல்லாம் யுரேனஸின் தனி இயல்கள். இவ் இயல்புகளில் அது இடம் பெறும் தலம் (Location) - சேர்க்கையில் வாய்க்கும கிரகங்களின் தன்மை-அவற்றின் செல்வாக்கு ஆகியவற்றில் நேரும் பலங்களில் மட்டும் பலன்கள் நிகழும். பொதுவில், இது இடம் பெறும் தலங்களில் உலகியல் வெற்றிகளில் உயர்த்துவன பாபக் கிரகங்களுக்குச் சொல்லப் பெறும் உபஜெயங்களில் மூன்று-ஆறு-பதினொன்று இம் மூன்றும் ஸ்திதி பலத்தில் உயர்ந்ததாகக் கூறலாம். பலா-பலங்களில் பதினொன்றைத் தவிர இரண்டு-ஐந்து-எட்டு இம் மூன்றும் தீதே. இவற்றுள் இரண்டு மிகவும் தீது. இந்த இரண்டாம் தலமும் வானத்து ராசிகளில் 'கோதண்டம்' என்னும் 'தனுசு' ஆயின், தீதினும் தீது. உலகியல் வெற்றிகளுக்கு உபஜெயங்களில் பதினொன்றாய் - அத்தலமும் 'கடகம்' அல்லது 'கன்னி' ஆயின், விசேஷ முடையதாகும்.

---

## 'டிரஸி'ன் பயன்

கல்யாணத் தரகர்:—(பெண் வீட்டாரிடம் வெகு பெருமையாக) எப்போ பார்த்தாலும் ரொம்ப 'ஜீட்டா' டிரஸ் பண்ணுகிறார் மாப்பிள்ளை !

பெண் வீட்டார்:—சரிதான் ! வீட்டைப் பெருக்கத் துடப்பம் வேண்டிய தில்லேபோ விருக்கு !

* * * *

## கற்பின் மகிமை

செங்கன்:—அந்த விபசாரி, கூட்டத்தில் ஏதோ பிரசங்கம் செய்து கொண் டிருக்கிறாளே, அவள் என்ன பேசுகிறாள் என்பது உனக்குத் தெரியுமா?

கொங்கன்:—ஆகா ! நன்றாகத் தெரியுமே, அவள் "கற்பின் மகிமை" என்பது பற்றித்தான் பேசிக்கொண் டிருக்கிறாள்.

கு. அ. இராமசாமி.

தொடர் கதை.

# தேவதேவி

சு. மீ. கணபதி



"வாசு! பெண் எவ்வளவு அழகாயிருக்கிறுள்? வேண்டாமென்று மறுத்துவிட்டாயே! இதுபோன்ற பெண்கள் நீ விரும்பும்பொழுது கிடைக்குமென நினைக்காதே. அவர்கள் சென்றபொழுது—அந்தத் தேவகி பார்த்த பார்வையில் நீ மயங்கி விட்டது தெரிந்தது. நீ மறுக்கமுடியாது. நான் அவர்களை மறுபடியும் கூப்பிட்டுக் காரியத்தை நிறைவேற்றுகிறேன். நீ அதை உத்தேசித்து வருந்த வேண்டாம்" என்ருள் கமலா.

"நல்லதாப்போச்சு! அவள் முழித்த முழியில் நான் பயந்தல்லவா போனேன்! அப்பொழுது தேவகி என்ற பெயர் வாசுகி என்று இருக்க வேண்டுமென நினைத்ததால் சிரிப்பு வந்தது. அதை அடக்கிக் கொண்டேன். சிரிப்பினுல் முகம் பிரகாசமடைந் திருக்கலாம். வேறு விதமாக ஒன்றுமில்லை."

"அது எப்படியோ போகட்டும்; வாசு! நீ அவளை மணந்து கொண்டால் அந்தக் கடைசி எழுத்தை உன் பெயருடன் சேர்த்தால் வாசுகி என்று ஆகி விடுகிறது. அது மாதிரிப் பெண்கள் கிடைப்பது அருமை. நீ நன்ருக யோசித்துப் பதில்கொடு" என்ருர் காந்தன்.

"எல்லோரும் உன் நலத்தைத் தான் விரும்புகிறேம். முதலில் வந்தாரே அவருடைய வேண்டுகோளை நீ மறுத்தபொழுது நாங்கள் குறுக்கிட்டோமா என யோசித்துப்பார். உனக்கும் வயதாகி விட்டது. பொறுப்புத் தெரிந்தவன். நாங்கள் அதிகம் சொல்லவேண்டியதில்லை" என்ருர் அவன் தகப்பனுர்.

"நீங்கள் சொல்லியவற்றை இதற்கு முன்பு மறுத்திருக்கிறேனு? பொறுப்பு இருப்பதாலேயே இவ்விதம் கூறுகிறேன். உங்கள் எல்லோருடைய அபிப்ராயத்திற்கும் மாருக நான் இந்த ஒரு விஷயத்தில் நடந்துகொள்ள நேரிட்டதற்குக் கவலைப் படுகிறேன். ஆனுலும் உங்கள் விருப்பம் நிறைவேருது போகும் என நான் நினைக்கவில்லை" என்ருன் வாசு.

"சுந்திராவைப்பற்றித் தான் சொன்னுய். உனக்கு அவள் விஷயத்தில் அதிகப் பொறுப்பு இருப்பதாகத் தெரிகிறது. மற்றெருத்தி யார்" என்ருள் கமலா ஏளனப் புன்னகையுடன்.

"நீ எப்படி வேண்டுமானுலும் நினைத்துக்கொள். சுந்திராவை உன்னைவிட அதிகமாகவே நேசிக்கிறேன் என்று கூறுவது மிகையாகாது. ஆனல் சுவர்ணு விஷயம் அப்படியல்ல. பத்மாசனியின் பெண் சுவர்ணுவைத்தான் நான் குறிப்பிடுகிறேன். நான் இங்கு வந்ததற்கு முதல் நாள்தான் அவர்களை ஊருக்கு அனுப்பி வந்தேன். என்னை மணந்து கொள்ளும்படி கட்டாயப் படுத்திப் பார்த்தார்கள். நான் சம்மதிக்கவில்லை. ஐந்நூறு ரூபாய் அவள் கல்யாணத்திற்குக் கொடுப்பதாகச் சொல்லி யிருக்கிறேன். அத்துடன் அவர்கள் மிகுந்த வருத்தத்துடன் சென்று விட்டார்கள்.

"சுந்திராவின் விஷயம் வேறு. அவளைக் குழந்தைமுதல் சோதரியாகப் பாவித்து விட்டேன். ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். இப்பொழுது வந்த தேவகியைப்போலவே யிருப்பாள். இவளைக் காட்டிலும் சுந்திரா அதிகச் சுந்திரமா யிருப்பாள் என்றும் கூறலாம். மிக நல்லகுணம்; எப்பொழுதும் சிரித்த முகம்; என்னை மணந்து கொள்ளப் பார்க்கிருள். நான் சோதரியாகப் பாவித்து விட்டதால் மறுக்கவேண்டி யிருக்கிறது. அப்பெண்ணை நல்ல இடத்தில் கொடுத்து மணம் நிறைவேற்றவேண்டிய கடமை அவள் சகோதரனைப்போல எனக்கும் இருப்பதாகக் கருதுகிறேன். அதற்காக எவ்விதத் துன்பம் நேரிட்டாலும் நான் பின்வாங்கப் போவதில்லை. பண விஷயத்திற்குத்தான் சொல்கிறேன். இவ்வித நிலைமையில் நான் வேறு இடத்தில் மணந்துகொண்டால் இரண்டு பெண்களுக்கும் மனம் வேறுபடும். என்மேலுள்ள அன்பை இழந்து விடுவார்கள். அவர்களுக்கு என்மீதுள்ள அன்பு என்றும் நீடித் திருப்பதற்காக நான் எதுவும் செய்யவேண்டியவன். இதை என் கடமையாக நான் பாவிக்கிறேன். இப்பொழுது உங்களுக்கு விஷயம் தெரிந்திருக்கிறது. தயவு செய்து இனிமேலும் யாராவது மணம் என்ற பேச்சுக்காக இங்கு வந்தால் பேச இடம் கொடாம லிருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ள வேண்டியவனாக இருக்கிறேன்."

"இவ்வளவு விவரிக்கும் அந்தச் சுந்திராவைத்தான் மணந்து கொள்வது தானே. ஒரு கவலை விட்டுப் போகுமே" என்ருள் கமலா

"எவ்வளவு பணம் சேர்த்து வைத்திருக்கிருய் இவர்களுக்கெல்லாம் கொடுப்பதற்கு ? நல்ல பைத்தியகாரத்தனம்" என்ருர் இவன் தகப்பனர்.

"பணமில்லையானல் யாரும் மதிக்கவே போகிறதில்லை. சேர்ப்பது மிகவும் கடினம். சேர்த்ததை இறைப்பது என்பது வேடிக்கையாக இருக்கிறது. கமலா கூறுகிறபடி அந்தச் சுந்திராவையே மணந்து கொண்டால் கொஞ்சம் பணமாவது மீத மிருக்கும்" என்ருர் காந்தன். வாசு பதில் சொல்லாமல் யோசனையி லிருந்தான்.

* * * *

ஆனந்தமே சுகம். அதுவே யின்பம். மனிதனுக்கு ஆனந்தம் ஏற்படும் பொழுது, தன்னல் முடியாதவற்றைக்கூடச் செய்யும் ஆற்றல் பெறுகிருன். அச்சமயங்களில் ஏது செய்யினும் யோசித்துச் செய்வது என்பதில்லை. இதனல் வரும் பலாபலன்கள் பலவிதமாகவுமிருக்கும். வாசுவும் இப்படியாகிவிட்டானே. இவன் லேடீஸ் கிளப்பில் பிரவேசம் செய்வது—அழகாகத்தானிருக்கிறது. இந்தப் பிரசங்கம் செய்ததால் பல இடங்களிலிருந்து அழைப்புகள் கிடைக்கும்; வேலை பார்த்தால்போல்தான். ஆனல் பெண்களிடையில் சிநேகமும், மதிப்பும் சிறிது ஏற்படலாம். என்னவாக இருப்பினும் அவன் முட்டாள் தனம் செய்ததாகவே சோமு எண்ணினன். பிரசங்கத்தைப் பத்திரிகையில் மறுபடியும் படித்துவிட்டு வீடடைந்தான்.

"இன்றைய பத்திரிகையில் மிகவும் முக்கியமான விஷய மிருக்கிறது, எல்லோரும் இங்கே வந்து கேளுங்கள்" என்ருன். அவன் தாய், மனைவி சகோதரி ஆகிய மூவரும் வந்தனர். பிரசங்கியின் பெயர் சொல்லாமல் படித்துக் காண்பித்து ஒவ்வொருவராக உங்கள் அபிப்பிராயத்தைச் சொல்ல வேண்டும்" என்ருன் சோமு.

"என்னடா பிரசங்கம் உபயோகமற்றது. பேசத் தெரிந்தவனக இருக்கவேண்டும். முன் காலத்தில் பெண்கள் எவ்விதமிருந்தார்கள், இப்பொழுது எப்படியிருக்கிருர்கள், இந்த மாறுதல் உண்டாகிய காரணம், முன் இருந்தது நல்லதா முதலியது ஒன்றுமில்லை. இந்தப் பிரமாதத்தையா

முக்யமான விஷயம் என்றாய். நீ பிரயோஜனமில்லாமல் எங்கள் வேலையைக் கெடுத்துவிட்டாய்" என்று கூறி அவன் தாய் எழுந்து சென்றாள்.

"புதிதாகப் பிரசங்கத்தில் ஒன்றுமில்லை. பலர் இதற்கு முன்பு பேசியிருப்பது எழுதியிருப்பது இவைகளைக் கக்கியிருக்கிறான். வேலை கெட்டது அநாவசியமாக" என்று கூறி அவன் மனைவியும் சென்றுவிட்டாள்.

"இருவர் கூறியதும் உண்மைதான். இந்தப் பிரசங்கம் பெண்களுக்காகச் செய்யப்பட்டது என்றாலும் ஆடவரின் நலன்களையே கோரிப் பேசப்பட்டிருக்கிறது. பெண்டிர் இன்னும் இதே நிலைமையிலிருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பேசியிருக்கிறான். வேறு யாரும் பதில் பேசவில்லையா? முடிவுரையாக யாராவது பேசியிருக்கிறீர்களா?" என்றாள் சுந்திரா.

"ஆம்" என்று கூறி மற்ற இருவரின் பிரசங்கத்தையும் படித்துவிட்டு "இப்பொழுது உன் அபிப்பிராயமென்ன? சரியான பதில் என நினைக்கிறாயா இல்லையா?" என்றான்.

"இதுவா சரியான பதில்? மழுப்பிப் பேசியிருக்கிறார்கள். நானுயிருந்தால் அந்தப் பிரசங்கிக்குச் சரியான சூடு கொடுத்திருப்பேன். ஆனால் யாரோ எங்கோ பேசியதைப் பற்றி என்ன செய்கிறது? இதுதானா இன்றைய பத்திரிகையில் விசேஷம்!"

"இதை விசேஷமாக நீ கருதவில்லையா? பேசியது யாரென நினைக்கிறாய்? வாசுதான் பேசியிருக்கிறான். தெரியாத் தனத்தால் பேச ஒப்புக்கொண்டிருக்கிறான்."

"அவரா பேசினார்? கடிதம் எழுதவே தெரியாத மனுஷன் பேசினால் இதைவிட நன்றாக இருக்கும் என எதிர்பார்க்க முடியாது. எனக்குத் தெரிந்து அவர் இதுவரை பேசியதேயில்லையே?"

"நானும் அவனும் சேர்ந்த நாள் முதல் அவன் பேசியதை நான் கேட்டதில்லை—அவனும் பேசியதில்லை. எப்படியோ முக்கால் மணி நேரம் பேசிவிட்டானே!"

"முக்கால் மணி நேரமா? சரிதான். இனிமேல் பெரிய பிரசங்கியாகிவிடுவார் என நினைக்கிறேன்."

"அவன் எவ்வளவு பெரிய பிரசங்கி ஆனாலும் நமக்கு அதனால் கெடுதல் ஒன்றுமில்லை. ஆனால் இதன் பலா பலன்களை யோசிக்கும் பொழுதுதான் சிறிது யோசனையாக இருக்கிறது;"

"இதில் கெடுதல் இல்லை யென்றால் எப்படியோ போகட்டுமே. இதில் யோசனைக்கு என்ன இருக்கிறது?"

"உனக்குப் பெண்களுடைய விஷயமே சரியாகத் தெரியாது. அதனால் இப்படிச் சொல்கிறாய். இவன் பார்ப்பதற்குச் சிறிது அழகா யிருப்பது ஒன்று. சப் கலெக்டரின் நெருங்கிய பந்து என்பது மற்றொன்று. தவிரவும் பெரிய குமாஸ்தாவாக நூறு ரூபாய் சம்பாதிப்பது ஒன்று ஆகிய இவைகள் தான் பெண்களின் மனதில் பதியும்."

"கடவடிக்கை கெட்டுவிடும் என நினைக்கிறீர்களா? அவர் அது போன்றவ ரல்லர் என நான் நினைக்கிறேன்."

"அவசரப் படுகிறாயே சுந்திரா, பெரிய மனுஷ்யர்கள் வீட்டுப் பெண்களை அவனுக்குக் கொடுக்க முன் வருவார்கள். சீக்கிரமே அவன் கல்யாணச் சாப்பாடு நமக்குக் கிடைக்கும் என்றே என் மனம் கூறுகிறது."

"வாஸ்தவமாகவா? இதற்கு வேறு வழி யில்லையா அண்ணா? நீங்கள் இவ்விதம் கூறிய பின்புதான் எனக்கும் தெரிகிறது."

"எனக்கு ஒரு வழியும் தோன்றவில்லை. இதற்குள் எத்தனை பேர்கள் அவனிடம் அணுகி யிருக்கிறார்களோ? உன்னைப் பற்றிய கவலையால் தான் இதையெல்லாம் சிந்திக்க நேரிட்டது. உனக்கு ஏதாவது வழி புலப்பட்டால் சொல். அதன்படி நடந்து பார்த்துவிட்டால் முடிவு தெரிந்த பின்பு உனக்கு எங்கேயாவது வரன் பார்க்க வேண்டி நேரிட்டாலும் நேரிடலாமென நினைக்கிறேன். ஆனால் இதற்காக மனதைத் தளரவிடக் கூடாது."

"ஒரே வழிதா னிருக்கிறது. நாம் உடனே அவரிருக்கு மிடம் செல்ல வேண்டியது தான். இருக்கும் நிலவரத்தைத் தெரிந்துகொண்டு நாமும் மண விஷயமாகப் பேச வேண்டியது."

"அழகான யோசனை. இதெல்லாம் நடக்கிற காரியமில்லை. இங்கிருந்து அங்கு செல்வதென்றால் காரணம் வேண்டுமே."

"நாம் போவதே காரியமாகத் தானே? இதையே அங்கே கூறுவது. அவர் தகப்பனாருடைய சம்மதம் வாங்கவேண்டியது முறை யல்லவா?"

"வாசு தனிமையி லிருந்தாலும் நீ சொல்கிறபடி கேட்டுப் பார்க்கலாம். அங்கு சென்று அதுவும் அவன் தகப்பனாரிடம் இதைப் பற்றிப் பேசினால், காரியம் நடைபெறாது. அவமானமும் நேர்ந்து விடும். அவமானம் நேர்ந்து விட்டால் வாசுவின் நட்பையும் இழக்க வேண்டியது தான்."

"வாசு நீங்கள் கருதுகிற மாதிரி நடக்கமாட்டார். நமக்கு அவமானம் எப்படிச் சம்பவிக்கும் என நினைக்கிறீர்கள்?"

"அவன் தகப்பனாரிடம் கேட்பது என்றால் அத்துடன் நின்று விடாது. அவன் சகோதரி யிடமும் இது விஷயமாகப் பேச வேண்டி யிருக்கும். வரதக்ஷிணை, சீர் முதலியவற்றைப் பற்றிக் கேட்டால் நாம் என்ன சொல்ல முடியும்? நமது உண்மை நிலைமையைச் சொன்னால் கேலி செய்வார்கள். நீயும் நன்றாக யோசனை செய்."

"நீங்கள் சொல்லியபடி உடனேயே பணக்காரர்கள் முயற்சிப்பார்கள் என நினைத்தால் நாம் அவசியம் சென்று வருதல் தான் நல்லது. அவமானம் ஏற்பட்டால் அது வாசுவையே சேரும். தவிர நாம் தங்குவதற்கு அங்கு இடம்?"

"கண்டிப்பாகப் போய்த்தா னாகவேண்டும் என்பது உன் எண்ணமானால் புறப்படுவோம். தங்கும் இடம் பற்றிக் கவலையில்லை. பெரிய ஹோட்டல்கள் இருக்கின்றன. அங்கு தங்கலாம். சௌகரியமாக வாசுவை அங்கேயே தருவித்துக் கேட்டால் விஷயம் தெரிந்து விடுகிறது."

"அதைக் கேட்டு, இருக்கும் நிலவரங்களைத் தெரிந்து கொண்ட பின்பு நான் அவர் சகோதரியுடன் பேசுகிறேன். நீங்கள் அங்கு வர வேண்டாம். நானே காரியத்தைச் சித்தியாக்கிக் கொண்டு வந்து விடுகிறேன்."

"முடியுமென நினைக்கிறாயா? வாசு இருந்தாலும் பணத்தைப் பற்றி அவ்வளவாகப் பேச்சு நிகழாது. அவன் இல்லாத பொழுது அதைப் பற்றிப் பேசினால் விபரீத மாகிவிடுமே?"

"உங்களுக்கு அந்தச் சிரம மில்லாமல் நான் பார்த்துக் கொள்கிறேன். ஆனால் வாசுவைமட்டிலும் ஜாக்கிரதையாக நான் வரும் வரையில் உங்களுடனே ஹோட்டலிலேயே நிறுத்தி வைக்கவேண்டும். இந்த விஷயத்திற்காக மொத்தம் எவ்வளவு பணம் கையிலிருக்கிறது? அதை நான் தெரிந்து கொள்ளலாமென்றால் சொல்லுங்கள்."

"மொத்தம் முந்நாறு ரூபாய் இருக்கிறது. அது தவிர நாம் போய் வரச் செலவுக்கு இருபது ரூபாய் இருக்கிறது. இந்த முந்நாறு ஒன்றுக்கும் உதவாது எனவே நினைக்கிறேன்."

"மூந்நாறு ரூபாய்; இது உங்களுடைய ஆறுமாதச் சம்பளமாயிற்றே? சாதாரணமாக ஒரு மனிதன் ஒருமாதச் சம்பளத்தைச் செலவு செய்வதே பெரும்பாடாக இருக்கும் பொழுது இந்தப்பணம் மிகவும் அதிகமென்றே என் புத்தியில் படுகிறது."

"சுந்திரா! நீ கேலி செய்கிருயா, அல்லது உண்மையில் தான் பேசுகிருயா?"

"வாஸ்தவமாகத்தான் சொல்கிறேன். நாம் எப்பொழுது புறப்படுவது? அம்மாவையும் கலந்துகொண்டு இன்று இரவு வண்டியில் சென்ருல் காலையில் இந்திர நகரத்திலிருக்கலாம். ஆனல் நீங்கள் லீவுக்கெல்லாம் எழுத வேண்டுமே? நாளை புறப்படலாம்."

"இல்லை சுந்திரா; அம்மா சம்மதித்தால் இன்றே புறப்படுவது தான் நல்லது. சீக்கிரமாகச் செல்வது நலம்; வா, அம்மாவைக் கேட்போம்" இருவரும் உள்ளே சென்றனர். சோமு தன் யோசனைகள் எல்லாவற்றையும் கூறி "உன் அபிப்ராயம் என்னம்மா? அது தெரிந்தபின்பு புறப்படுவதற்கு வேண்டிய ஆயத்தங்கள் செய்யவேண்டியிருக்கிறது" என்ருன்.

"இந்தமாதிரி முன்னமேயே எனக்கும் யோசனையுண்டு. சிறிது பணம் சேர்ந்த பின்பு வாசுவிடம் பிரஸ்தாபிக்க விருந்தேன். ஆனல் நீங்கள் அங்கு போய்க் கேட்டால் பணம் அதிகம் கேட்பார்கள். இப்பொழுது போய்வரும் செலவு வேறு இருக்கிறது. எலலாவற்றையும் நன்ருக யோசனை செய்து கொள்ளுங்கள்."

"வேறு வழி ஒன்றும் தெரியவில்லை. சுந்திரா கூறிய யோசனைதான் இது. ரயில் பதினேரு மணிக்குத்தான். நன்ருகத் தீர்மானித்துச் சொல்" என்ருன் சோமு.

"சுபகாரியமாக இதுதான் முதல் யத்தனமாக இருப்பதால் உங்களுடைய யோசனைப் படியே புறப்பட்டுச் செல்லுங்கள். பணவிஷயமாக ஜாக்ரதையாகப் பேசவேண்டும். என்னிடம் முந்நாறு ரூபாய் தனியாக இருக்கிறது. ஆகமொத்தம் அறுநாறு ரூபாய்தான். இதற்குள்ளாகக் காரியத்தை முடிக்க வேண்டும். அவர்கள் சிறிது ஏளனமாகப் பேசினலும் கோபமோ வருத்தமோ படக்கூடாது. எங்கும் பெண் வீட்டாருக்குச் சகஜமாக இது ஏற்படுகிறது. உங்களுக்கு இந்த விஷயத்திலெல்லாம் அனுபவம் போதாது என்றுதான் இவ்வளவும் சொல்லவேண்டி யிருக்கிறது. லீவுக்கு யாரிடமாவது எழுதிக் கொடுத்துவிட்டு வந்துவிடு. அதற்குள் சுந்திரா பயணத்திற்கு வேண்டியதைச் சித்தப் படுத்தட்டும். கடவுள் உங்கள் முயற்சியில் வெற்றியுண்டாக்குவார்" என்ருள் சோமுவின் தாய்.

இதில் சுந்திராவுக்குப் பெரிய ஆனந்தம். காரியம் கைகூடி விட்டதாகவே எண்ணினள். தவிரவும் வெளியூர்ப் பயணம் என்று நினைக்கும் பொழுது அவள் சந்தோஷம் அதிக மாயிற்று. கடந்த ஐந்து வருடங்களாக மதுரபுரியைத் தவிரச் சிறு கிராமம்கூடப் பார்த்ததுமில்லை. தன் அண்ணியின் யோசனைப்படி சில்க் புடவைகளாக மூன்றைமட்டில் எடுத்துக்கொண்டாள். அதற்கு ஜோடியாகவுள்ள ஜாக்கட்டுகள் முதலானவற்றையும் எடுத்து வைத்துக் கொண்டாள். தன் சகோதரனுக்குத் துணி மணிகளையும் எடுத்து வைத்துக் கொண்டாள். எல்லாம் ஒரு பெட்டியில் அடங்கிற்று. படுக்கையையும் எடுத்துக்கட்டி முடித்தாள்.

# தாரண ஸ்ரீ புரட்டாசிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா ரிஜ் | க ஜி | பா | க | பா | க | பா | க | பா | க |
| 1 | 23 | 39 | 27 | 149 | 59 | 133 | 32 | 168 | 44 | 135 | 39 | 138 | 09 | 171 | 58 | 76 | 34 | 91 | 32 |
| 2 | 23 | 43 | 24 | 150 | 58 | 145 | 28 | 169 | 23 | 135 | 46 | 138 | 22 | 173 | 12 | 76 | 38 | 91 | 29 |
| 3 | 23 | 47 | 20 | 151 | 56 | 157 | 20 | 170 | 02 | 135 | 59 | 138 | 35 | 174 | 26 | 76 | 42 | 91 | 26 |
| 4 | 23 | 51 | 17 | 152 | 55 | 169 | 11 | 170 | 41 | 136 | 09 | 138 | 48 | 175 | 40 | 76 | 46 | 91 | 22 |
| 5 | 23 | 55 | 13 | 153 | 54 | 181 | 10 | 171 | 21 | 136 | 49 | 139 | 01 | 176 | 54 | 76 | 50 | 91 | 19 |
| 6 | 23 | 59 | 10 | 154 | 53 | 193 | 09 | 172 | 00 | 137 | 20 | 139 | 13 | 178 | 07 | 76 | 53 | 91 | 16 |
| 7 | 0 | 03 | 06 | 155 | 51 | 205 | 22 | 172 | 40 | 138 | 05 | 139 | 26 | 179 | 21 | 76 | 56 | 91 | 13 |
| 8 | 0 | 07 | 03 | 156 | 50 | 217 | 35 | 173 | 20 | 138 | 51 | 139 | 39 | 180 | 35 | 76 | 59 | 91 | 10 |
| 9 | 0 | 10 | 59 | 157 | 49 | 230 | 15 | 174 | 00 | 139 | 03 | 139 | 52 | 181 | 49 | 77 | 02 | 91 | 07 |
| 10 | 0 | 14 | 56 | 158 | 48 | 242 | 55 | 174 | 39 | 140 | 16 | 140 | 04 | 183 | 02 | 77 | 05 | 91 | 03 |
| 11 | 0 | 18 | 52 | 159 | 47 | 256 | 15 | 175 | 19 | 142 | 05 | 140 | 17 | 184 | 16 | 77 | 08 | 91 | 00 |
| 12 | 0 | 22 | 49 | 160 | 45 | 269 | 36 | 175 | 59 | 143 | 54 | 140 | 30 | 185 | 30 | 77 | 11 | 90 | 57 |
| 13 | 0 | 26 | 45 | 161 | 44 | 283 | 48 | 176 | 39 | 145 | 22 | 140 | 43 | 186 | 46 | 77 | 14 | 90 | 54 |
| 14 | 0 | 30 | 42 | 162 | 43 | 298 | 01 | 177 | 10 | 146 | 51 | 140 | 55 | 187 | 57 | 77 | 16 | 90 | 51 |
| 15 | 0 | 34 | 38 | 163 | 42 | 313 | 00 | 177 | 50 | 148 | 26 | 141 | 08 | 189 | 11 | 77 | 19 | 90 | 48 |
| 16 | 0 | 38 | 35 | 164 | 41 | 327 | 59 | 178 | 39 | 150 | 01 | 141 | 20 | 190 | 25 | 77 | 21 | 90 | 44 |
| 17 | 0 | 42 | 31 | 165 | 40 | 343 | 16 | 179 | 19 | 151 | 11 | 141 | 33 | 191 | 39 | 77 | 24 | 90 | 41 |
| 18 | 0 | 46 | 28 | 166 | 39 | 358 | 33 | 179 | 59 | 153 | 22 | 141 | 45 | 192 | 52 | 77 | 26 | 90 | 38 |
| 19 | 0 | 50 | 24 | 167 | 38 | 13 | 20 | 180 | 39 | 155 | 05 | 141 | 57 | 194 | 06 | 77 | 28 | 90 | 35 |
| 20 | 0 | 54 | 21 | 168 | 37 | 28 | 07 | 181 | 19 | 156 | 49 | 142 | 09 | 195 | 20 | 77 | 30 | 90 | 32 |
| 21 | 0 | 58 | 17 | 169 | 36 | 42 | 05 | 181 | 59 | 158 | 34 | 142 | 21 | 196 | 34 | 77 | 32 | 90 | 28 |
| 22 | 1 | 02 | 14 | 170 | 36 | 56 | 02 | 182 | 40 | 160 | 19 | 142 | 34 | 197 | 47 | 77 | 34 | 90 | 25 |
| 23 | 1 | 06 | 10 | 171 | 35 | 69 | 02 | 183 | 20 | 162 | 05 | 142 | 46 | 199 | 01 | 77 | 36 | 90 | 22 |
| 24 | 1 | 10 | 07 | 172 | 34 | 82 | 02 | 184 | 00 | 163 | 51 | 142 | 58 | 200 | 15 | 77 | 38 | 90 | 19 |
| 25 | 1 | 14 | 03 | 173 | 33 | 94 | 20 | 184 | 40 | 165 | 37 | 143 | 10 | 201 | 29 | 77 | 40 | 90 | 16 |
| 26 | 1 | 18 | 00 | 174 | 33 | 106 | 38 | 185 | 21 | 167 | 22 | 143 | 22 | 202 | 42 | 77 | 41 | 90 | 13 |
| 27 | 1 | 21 | 56 | 175 | 32 | 118 | 33 | 186 | 02 | 169 | 08 | 143 | 34 | 203 | 56 | 77 | 42 | 90 | 10 |
| 28 | 1 | 25 | 53 | 176 | 32 | 130 | 28 | 186 | 43 | 170 | 53 | 143 | 46 | 205 | 09 | 77 | 43 | 90 | 06 |
| 29 | 1 | 29 | 49 | 177 | 31 | 142 | 19 | 187 | 24 | 172 | 37 | 143 | 58 | 206 | 23 | 77 | 44 | 90 | 03 |
| 30 | 1 | 33 | 46 | 178 | 30 | 154 | 09 | 188 | 04 | 174 | 21 | 144 | 10 | 207 | 36 | 77 | 45 | 90 | 00 |
| 31 | 1 | 37 | 42 | 179 | 30 | 166 | 05 | 188 | 45 | 176 | 05 | 144 | 22 | 208 | 50 | 77 | 46 | 89 | 57 |

**ஆகாயக் காட்சி:-**

1உ முற்பகல் மணி 10-40க்கு சசிக்குத் தெற்கில் பா 4-14ல் புதனும்,
1உ பிற்பகல் ,, 3-52க்கு ,, ,, பா 2-20ல் குருவும்,
4உ முற்பகல் ,, 9-50க்கு ,, ,, பா 4-26ல் குஜனும்,
4உ முன் இரவு ,, 7-48க்கு ,, ,, பா 4-14ல் சுக்ரனும்,
23உ முன் இரவு ,, 11-12க்கு ,, வடக்கில் பா 1-03ல் சனியும்,
29உ முற்பகல் ,, 9-30க்கு ,, தெற்கில் பா 2-56ல் குருவும்,
31உ காலை ,, 6-42க்கு ,, ,, பா 3-45ல் புதனும்,
சந்திர சமாகமம்.

**பிரவேசங்கள் முதலியன:—**7உ மாலை மணி 7-32க்கு சுக்ரன் துலாத்திற்கும், 17உ காலை மணி 6-03க்கு புதன் கன்னிக்கும், 18உ காலை மணி 7-11க்கு குஜன் துலாத்திற்கும் பிரவேசிக்கின்றன. 1உ புதன் வக்ரத் தியாகம், 16உ புதன் கிழக்கில் மகாஸ்தமனம், 7உ குஜன் மேற்கில் அஸ்தமனம்.

* அயனாம்சம் பா-22 கலை-57 விகலை 10·2079 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

† ராகு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாரணஸு புரட்டாசிமீ கலியுகாதி 5046, சாலிவாகனம் 1867
பசலி 1354, கொல்லமாண்டு 1120, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944ஸு செப்டம்பர்—1944ஸு அக்டோபர்மீ

| புரட்டாசி | செப்டம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | சனி | சசி20-23 | பூர60-00 | சித்60 | ஷடசீதி புண்யகாலம் [ஸ்யை |
| 2 | 17 | ஞா | ●25-47 | பூர3-35 | சி3-35அ | சர்வ பிதுரு-மஹாளய அமாவா |
| 3 | 18 | திங் | பிர30-41 | உத்10-13 | சித்60 | நவராத்திரி ஆரம்பம் |
| 4 | 19 | செவ் | துதி34-52 | அ16-48 | சித்60 | சந்திர தர்ஸனம் |
| 5 | 20 | புத | திரு38-58 | சித்22-50 | சித்60 | ஆயுதம் பயில |
| 6 | 21 | வியா | சது42-07 | சு27-38 | அ27-28சி | மாஸ சதுர்த்தி விரதம் |
| 7 | 22 | வெள் | பஞ்43-48 | வி31-13 | சித்60 | லலிதா பஞ்சமி |
| 8 | 23 | சனி | சஷ்45-11 | அ34-15 | சித்60 | சஷ்டி விரதம் |
| 9 | 24 | ஞா | சப்44-23 | கே35-26 | ம35-26அ | ஸரஸ்வதி பூஜாரம்பம் |
| 10 | 25 | திங் | அ43-12 | மூல35-17 | சி35-17ம | ஸத்ய பராக்கிரம தீர்த்தம் |
| 11 | 26 | செவ் | நவ40-17 | பூ34-07 | சி34-07பி | துர்க்கா நவமி, ஆயுத பூஜை |
| 12 | 27 | புத | தச36-07 | உத்32-24 | அ32-24சி | |
| 13 | 28 | வியா | ஏ31-13 | திரு30-18 | சித்60 | |
| 14 | 29 | வெள் | து25-48 | அ26-25 | சித்60 | |
| 15 | 30 | சனி | திர20-27 | சத22-51 | அ22-51ம | |
| 16 | 1 | ஞா | ச○15-09 | பூர18-35 | சி18-35அ | |
| 17 | 2 | திங் | பௌ8-57 | உட்14-26 | சித்60 | |
| 18 | 3 | செவ் | பிர3-03<br>துதி56-56 | ரே10-13 | சித்60 | |
| 19 | 1944ல் அக்டோபர்மீ 4 | புத | திரு52-12 | அசு6-37 | ம6-37சி | |
| 20 | 5 | வியா | சது48-11 | ப✻3.35 | சி3-35ம | கிருத்திகை விரதம் |
| 21 | 6 | வெள் | பஞ்45-17 | கிரு1-13 | சி1-13ம | மந்திரார்த்தங்கள் |
| 22 | 7 | சனி | சஷ்42-39 | ரோ0-11<br>மிரு59-23 | அ0-11சி | அவமாகம் |
| 23 | 8 | ஞா | சப்42-07 | திரு60-00 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 24 | 9 | திங் | அ41-58 | திரு0-23 | சி0-23அ | சித்தி-கார்-நாழி-45. விநா-31 |
| 25 | 10 | செ | நவ43-13 | புன2-26 | சித்60 | யந்திர முயற்சிகள் |
| 26 | 11 | புத | தச45-36 | பூச6-00 | சித்60 | மந்திராத்தங்கள் |
| 27 | 12 | வியா | ஏ49-13 | ஆ10-12 | சி10-12அ | சர்வ மத்வ ஏகாதசி |
| 28 | 13 | வெ | து54-12 | மக15-37 | ம15-37சி | கோவத்ஸ துவாதசி |
| 29 | 14 | சனி | திர60-00 | பூர22-17 | சி22-17ம | சனிபிரதோஷம் |
| 30 | 15 | ஞா | திர0-23 | உத்28-48 | அமி60 | நரகசதுர்த்தி,தீபாவளிபண்டிகை |
| 31 | 16 | திங் | ● ச4-47 | அஸ்34-53 | சி34-53பி | அமாவாஸை, கேதார விரதம் |

சனி
ரா
1-வ-தி—புதன்
7—துலா—சுக்ர
15—கன்—புதன்
16—துலா—செவ்
30—மிது—ராகு
,, சாப—கேது
31—விருச்—சுக்
,, துலா—சூரி
கே
குரு வ-பு
செ
சூ-சு

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET MADRAS.

**சர்வமேக நிவாரணத் தைலம்**




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளைகளிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊரிய மேக ரோகங்கள், மேக வாயு, தனுர்வாதம், முழங்கால் வாதம், குதிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரையோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முதலியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், தேக இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்டாக்காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமாகிய உண்மையான மருந்து.

இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

**எ-லிக்ஸ்ரைன்**

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, துர்நீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, விங்கப்புண், விங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல், கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியாதிகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

**20-நாள் மருந்து 40-வேளைக்கு (பூரண குணத்துக்குப் போதுமானது) ரூபா 2-4-0**

**குன்மக் குடாரி**

ஸ்டமக் பவுடர்:
ஆபரேஷன் தேவையில்லை:

சகலவித வயிற்றுவலியையும் **Appendicitis** என்னும் வயிற்றிலுண்டாகும் வியாதியையும், புண்களையும், வயிற்றை ஆபரேஷன் செய்யாமல் இம்மருந்து உத்தரவாதத்துடன் குணப்படுத்தும். இம்மருந்து மலையாள அஷ்டாங்க முறைப்படி தயார் செய்தது. (அல்சர்), அஜீரணம், மலபந்தம், குடலிரைச்சல், புளியேப்பம், வயிற்றுக்குத்தல், குடல்புண், ரணம், சதை வளர்தல், குலைக்கட்டி, ஈரலில் சதை வளருதல், குன்மம், சாப்பிடும் முன்னும் பின்னும் வயிற்றில் உண்டாகும் வலி இன்னும் பலவிதமான வியாதிகளையும் குணப்படுத்தும். **30-நாள் 60-வேளை மருந்து விலை ரூபா 2-8-0**

**தனலட்சுமி கம்பெனி, கே. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# ஆனந்த
# ஆங்கில பாஷா போதினி
## விலை ரூபா 2.




800-பக்கங்களுக்கு மேல் திக்கு காகிதத்தில் அச்சிடப் பட்டு சீமை காலிகோ பைண்டு செய்யப்பட்டது.

இதைச் சிரத்தையுடன் கற்றுக்கொள்ளத் தொடங்குவோர் பணச் செலவில்லாமலும், வேறெவ்விதக் கஷ்டமில்லாமலும் மிக எளிதில் இங்கிலீஷ் பேசவும், படிக்கவும், எழுதவும் கற்றுக் கொள்ளலாம். 10 வருஷம் படிப்பதனால் எவ்வளவு ஆங்கிலத் தேர்ச்சியுண்டாகுமோ அவ்வளவு தேர்ச்சியை ஒரு மாதம் அல்லது 40 நாட்களில் இப்புத்தகத்தின் உதவியைக் கொண்டு அடைந்து, ஆங்கிலத்தை அதி விரைவில் படித்துக் கொள்ளலாம்.

இதில் ஒரு ரூபா முதல் 10 ஆயிரம் ரூபா வரை சம்பளப் பட்டிக் கணக்கு, வட்டிக் கணக்கு, ஒவ்வொரு தேசத்திலும் ஏற்படும் மணி வித்தியாசம், அன்னிய தேச நாணய மதிப்பு முதலியனவெல்லாம் தெளிவாக விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. இது முக்கியமாக மணியகாரர் கர்ணம், வில்லேஜ் முன்சீப் முதலியவர்களுக்கும், சிலோன் தோட்டங்களிலிருக்கும் கங்காணிமார்கட்கும் உதவி செய்யக்கூடியது.

மேற்படி தெலுங்கு பதிப்பு விலை ரூ. 2.

---

## "ஜீவா" தீட்டிய நவீனங்கள்

## "யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?"

ரூபா 1—0—0.

## சீமாட்டி கார்த்தியாயினி

அணா 12.

## காதலா? காதகனா?

ரூபா 1—4—0.

## உபிரோவியம்

அணா 12.

---

ஆனந்தபோதினி ஆபீஸ் தபால்பெட்டி நெ. 167, மதராஸ்.

# கோசார பல நிர்ணயம்

ஸ்ரீமான் என். ஆர். திருவேங்கடாச்சாரியார், பி. ஏ. எழுதியது.

கோசார பலன்கள் நடைபெறுவது பல்வேறு அம்சங்களைப் பொறுத்திருக்கிறது என்ற விஷயத்தை விரிவாக ஆசிரியர் இந்த நூலில் குறிப்பிட்டிருக்கிறார். அது மாத்திரமில்லை. கோசார சம்பந்தமாகவுள்ள பல வேறு புராதன கிரந்தங்களில் காணப்படும் எல்லா முக்கிய விஷயங்களையும் ஆசிரியர் உருட்டித் திரட்டிக் கொடுத்திருப்பது இதிலுள்ள முக்கிய விசேஷமாகும். மாத வார தின பலன்களையும், ஆதாய விரய பலன்களையும், போக மேற்பட்ட நக்ஷத்திரத்தைக்கொண்டு ரோகம் நீங்கக்கூடிய காலத்தையும் கண்டறியும் விவரம் முதலிய பல உபயோகமான விஷயங்களை ஆசிரியர் இதில் சேர்த்திருக்கிறார். தமிழ் நாட்டில் ஒவ்வொருவர் கையிலுமிருக்கவேண்டிய நூலாகும். **இதன் விலை அணா 8,**

ஸ்ரீமான்-ஆரணி குப்புசாமி முதலியார் எழுதியது

# கற்கோட்டை

இதில் தேசப் பிரஷ்டமடைந்த சில உயர்குல மகுடவர்த்தனர்கள் தலை மறைந்து வசிக்கும்போது, நெஞ்சு திடுக்கிடும் பிராணாபத்துகளில் சிக்கிக் கொள்வதும், அவற்றினின்று தப்பித்துக்கொள்ள அவர்கள் செய்யும் வீர தீர சாமர்த்தியச் செயல்களும், சொல்லொணா வியப்பையும் சோகத்தையும் வீரரசத்தையும் காட்டும். சில ஸ்திரீகளின் அற்புத நடக்கைகளும், துணிகரமான தீரச்செயல்களும், தம் காதலரிடத்தில் மெய்க்காதல் கொண்ட உத்தம ஸ்திரீகள் தம் காதலர் பொருட்டாய் எவ்வளவு வகையில் ஆடவருக்குச் சமமாய் நடந்துகொள்ளச் சக்தி யுடையவர்களா யிருக்கிறார்களென்பதும் இக் கதையால் நன்கு விளங்கும்.

விலை ரூபா 2—8—0

## கற்பகச் சோலையின் அற்புதக் கொலை

இது இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு போல் படிப்பவரின் மனதை இழுத்து எல்லோருக்கும் ஆனந்தத்தையும் அற்புதத்தையும் உண்டாக்கத் தக்கது.

**இதன் விலை ரூபா 1—8—0.**

## அர்ஜுனஸிங்கும், சுந்தரும்

இதில் இரண்டு துப்பறியும் நாவல்கள் அடங்கியிருக்கின்றன. இவற்றுள் துப்பறியும் நிபுணர்கள் சாமர்த்தியமாகக் குற்றவாளிகளைக் கண்டு பிடிப்பதோடு ஒரு குரங்கும் கிளியும் மர்மமான கொலைக்கேஸை வெளியாக்குவது விநோதமாயிருக்கும்: குற்றம் வெளியாகியும் குற்றவாளி விடுதலை யடைதல் ஆச்சரியமாயிருக்கும்.

இதன் விலை அணா 3.

---





Edited, Printed and Published by N. MUNISAMI MUDALIAR, at the "ANANDA BODHINI PRESS", No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.